ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ஆண்டாள்
# சந்திரகலாமாலை.

திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்க வெளியீடு, 25.

சங்கக் காரியாலயம்:
15, கணபதி முதலி தெரு,
திருவல்லிக்கேணி.
12—1—1950.

ஸ்ரீ:

# திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கப் பிரசுரம்.

| இலக்கம். | வெளியீட்டின் பெயர். | வள்ளலார் பெயர். |
|---|---|---|
| 1. | ஸ்ரீ ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் வைபவம். | ஸ்ரீமான் வி. யன். சிங்காரவேலு முதலியார் அவர்கள். |
| 2. | தேசிகர் நூற்றந்தாதி. | ஸ்ரீமான் ஆர். கேசவய்யங்கார் அவர்கள். |
| 3. | மறைமுடித் தேசிகனார். | ஸ்ரீமான் சுந்தரசேகர நாயக்கர் அவர்கள். |
| 4. | மணவாள மாமுனிகள். | ஸ்ரீமான் வி. நரஸிம்மாசாரியார் அவர்கள். |
| 5. | அழகர் மாலை. | நற்றமிழன்பர்கள். |
| 6. | வேதாந்த தேசிக ஊசல். | ஸ்ரீமான் ஆர். கேசவய்யங்கார் அவர்கள். |
| 7. | தோத்திர மாலை. | ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்கள் திருத்தேவியார் ஸ்ரீரங்க நாயகி அம்மாள். |
| 8. | தொண்டர் மாலை. | ஸ்ரீ பண்டித சிந்தாமணி கோபாலய்யங்கார் அவர்கள். |
| 9. | கம்பர் மாலை. | ராவ்ஸாஹெப். ஆர். ராமஸ்வாமி அய்யங்கார் அவர்கள். |
| 10. | பரிமுக மாலை. | ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸராகவாசாரியார் அவர்கள். |
| 11. | ஸ்ரீ ஆண்டாள் மாலை. | ஸ்ரீமான் பி. எஸ். திருமலை அய்யங்கார் அவர்கள். |
| 12. | ஸ்ரீ பார்த்தசாரதி மாலை. | ராவ்பஹதூர் கே. ஆர். ராமாநுஜம் அவர்கள். |

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீ ஆண்டாள்

# சந்திரகலாமாலை.

## திருவல்லிக்கேணித்
## தமிழ்ச்சங்க வெளியீடு—25.

இது

ஸர்வ மங்கள விரோதியாண்டு மார்கழித் திங்கள்
இருபத்தி யெட்டாம் நன்னாள் ("சிற்றஞ்
சிறுகாலே") வியாழக்கிழமை யன்று

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்."

என்று போற்றப் பெறும் ஸ்ரீவில்லிபுத்தூரில்
ஸ்ரீ ஆண்டாள் திருவடிவாரத்தில்
இடப் பெற்ற காணிக்கை.

12—1—1950.

## உள்ளுறை.

பக்கம்

ஸ்ரீ:

# முகவுரை.

வாழ்வான கீர்த்திமிகும் பூதர் பொய்கை
வரர்பேயர் பட்டர்பிரான் பத்தி சாரர்
சூழ்செய்குல சேகரனூர் யோகி வாகர்
தொண்டரடிப் பொடிகலிய னெதிக ணுதன்
தாழ்வியாது மிலாத பராங் குசருந்தேனுர்
தண்டுளவத் தார்முடிய னடிய ரான
ஆழ்வாரா சிரியர்திரு வடியே சென்னி
யணிகுவோ மனுதினமும் பணிகு வோமே.

—(ஸ்ரீமத் வேதாந்த தேசிக வைபவப்ரகாசிகைக்
கீர்த்தனை. காப்பு. 6)

வாழி திருப்பாவை பாடு மடப்பாவை
வாழி யரங்க மணவாளர்—வாழியவன்
மாடுநிற்கும் புள்ளரையன் வாழி பெரியாழ்வார்
பாடுநிற்கும் வேதாந்தப் பா.

—(பெருந்தொகை. 1835)

இருக்கோது மந்தணர்சூழ் புதுவாபுரி யெங்கள் பிரான்
மருக்கோதை வாழும் வடபெருங் கோயின்மணிவண்ணனூர்
திருக்கோ புரத்துக் கிணையம்பொன் மேருச் சிகரமென்றே
பருக் கோதலாமன்றி வேறுவமானப் பண்பில்லையே.

—(பெருந்தொகை. 32)

பொருந்தியசீ வில்லிபுத்தூ ரின்மேவிய புண்டரிகத்
திருந்தருளே செய்திடுநாச் சியாரம்ம னென்பவளைத்
தரும்பெரும் பொன்மதி சீர்கருணைப் பெயர்தாங்குகின்ற
வரும்பெரு மேன்மைகொள் வேளாளர் பாண்டியன்
[மண்டலமே.

—(பாண்டிமண்டல சதகம். 16)

மடலிற்றபுட்ப மணிநாச்சி யாரம் மன்மாமணஞ் செய்
திடமிக்க வாசையுட னேபுதுவை யிற்சென்று மென்று
அடல்பெற்ற வேங்கடத்தாரு மன்னரு மழகருந் தென்
வடபத்திர சாயியுந் தானுன பாண்டியன் மண்டலமே.

—(பாண்டிமண்டல சதகம். 52)

திருப்பாவையாதி நல்திவ்யப்ரபந்தத் தைச்சேதநர்கள்
கருப்பாவைநீங்கி யுய்யும்படி தந்தநங் கண்மணியை
உருப்பாவையாய்த் துளவுற்றுளைக் கோதையை யுன்னி
[நெஞ்சே
இருப்பாவையுள் ளகத்தெல்லாம் கிடைக்கு மினியுனக்கே.

—(ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்தலபுராண வசநம். முகவுரை.)

ஆரணஞ்சேர் வில்லிபுத்தூ ருறையூர்வாழ
வவதரித்த நாயகியா ராடிரூசல்
பேரணிபூ ணழகுடையார் தாமேயென்னும்
பெண்டுகடந் நாயகியா ராடிரூசல்
நாரணர் பூரணர் பெரியபெருமா ளெங்க
ணம்பெருமா ளுயகியா ராடிரூசல்
தேரணியு நெடுவீதி புடைசூழ் கோயிற்
சீரங்க நாயகியா ராடிரூசல்.

—(சீரங்க நாயகியாரூசல். 10)

கமலமுடன் வில்லிபுத்தூர் விளங்கவந்தாள் வாழியே
காரார்நற் றுழாய்க்கானத் தவதரித்தாள் வாழியே
விமலமாந் திருவாடிப் பூரத்தாள் வாழியே
விட்டுசித்தர் வளர்த்தெடுத்த விளங்கிழையாள் வாழியே
அமலைதிருப் பாவைஐயா றளித்தருள்வாள் வாழியே
ஆகநூற்றெண் ணைந்துமூன் றுரைத்தாள் வாழியே
அமுதனு மரங்கனுக்கு மாலையிட்டாள் வாழியே
ஆண்டாடன் னிணையடிக ளனவரதம் வாழியே.
—(வாழித்திருநாமம். 14)

" திருப்பாவை யென்னத் திருந்தியற்பாத் தந்த, திருப்பாவை வில்லிபுத்தூர்ச் செல்வி." இச் சங்கத்துப் பதினொன்றுவது வெளியீடு (27—7—1941) **"ஸ்ரீ ஆண்டாள் மாலை"** என்பது நற்றமிழுலகு நன்கு அறிந்ததே.

ஆண்டாள் விஷயமாயுள்ள **" சந்திரகலாமாலை "** வில்லியெனுந் திவ்விய கவியால் இயற்றப் பெற்றது. இதனை,

" மந்திர கலாமாலை மானமதித்த நல்குஞ்
சந்திர கலாமாலை சாற்றினான்—இந்திரைப்பேர்
மெல்லிய லாரின்றுணைவி வில்லிபுத்தூ ராண்டாட்கு
வில்லியெனுந் திவ்வியக வி."

" திருமருவும் வில்லிபுத்தூர் தன்னில் வாழுஞ்
செழுமறையோர் யாவர்க்குஞ் சிறந்த ஞான
மருவுமொரு மறையவனாய் மகிழ்ந்து மேவும்
மங்களஞ்சேர் விஷ்ணுசித்தன் மகளதாகி

வருமாதின் சந்திரகலா மாலை செய்தான்
வைஷ்ணவரிற் பூர்வசிகை வகையில் வந்தோன்
தருமருவும் வேயர்குலத் தவத ரித்த
சதுர்மறையோன் வில்லியெனச் சாற்று வோனே.''
என்ற பாயிரப் பாடல்களால் அறியலாம்.

இம்மாலை, சந்தமினிய செந்தமிழிலுள்ள தொண்ணூற்றுறுவகைப் பிரபந்தங்களுள் எண் செய்யுள் என்னும் பெயரது. (எண் செய்யுளாவது - பாட்டுடைத் தலைவரது ஊரினையும் பேரினையும் புனைந்து பத்துப் பாட்டு முதல் ஆயிரம் பாட்டு வரை பாடி எண்ணுற் பெயரிடுவது.) இந் நன்னூல் பதினறு செய்யுளாய் அமைந்திருத்தலிற் "சந்திரகலாமாலை" யென்று பெயர்புனையப் பெற்றுள்ளது. சந்திரகலை பதினறு என்பது அனைவரும் அறிந்ததே.

இச்சீரிய நூலில் உள்ள பதினறு பாடல்களாலும் பாட்டுடைத்தலைவியாரது மகிமையும் தலத்தின் பெருமையும் மிகவும் அழகாக வர்ணித்துரைக்கப் பெற்றிருத்தல் யாவரும் வியந்து அநுபவிக்கத் தக்கதே.

இம்மாலையின் ஒன்பதாவது பாடலால் இந்நூலாசிரியர் சரித்திரத்தின் பகுதி ஒன்றை நன்கு அறியலாம். ஸ்ரீ ஆண்டாளது திவ்யாநுக்ரஹத்தைப் பெற்று இதனைப் பாடினர் இவர் என்பதும் தேற்றம்.

இச் "சந்திரகலாமாலை" குறிப்புரையுடன் இத் தமிழ்ச்சங்க வெளியீடாகப் பிரசுரிக்கலாயிற்று.

இவ்வெளியீடு "அப்புவய்யங்கார் என்று பெயர் விளங்கின கவிபூஷணம் நரஸிம்மாசார்யர் ஸ்வாமிகளால் வெகுதானிய வருஷம் சித்திரை மாதம் மதுரை ஹரிசமயதி வாகரம் பிரஸில் பதிப்பிக்கப் பெற்றதை" அடியொற்றி யது. "ஆழ்வார் திருநகரி அலங்காரம் இராமய்யங்கார் அவர்கள் குமாரர் அலங்காரம் தேவராஜய்யங்காரால்" அச்சிடப் பெற்ற பிரதிக்கும் இதற்கும் வேறுபாடுகள் உள. இங்குப் பதிப்பித்துள்ள பாக்கள் முறையே 1, 15, 10, 4, 16, 14, 13, 6, 3, 2, 8, 7, 9, 11, 12, 5 என்ற பாக்களாக சில பாட பேதங்களுடன் அங்குக் காணப் பெறுகின்றன.

இச்சங்க வெளியீட்டிற்குப் பூரண வுதவிபுரிந்த புண்ணியர் அலர்மேல் மங்கையுறை மார்பன் பொன்னடிக் கடவாதே நன்னெறியில் வாழ்ந்து வரும் நற்குணநிதி; மிகச்சிறந்த தேசிக பக்தர்; ஆத்மகுண பூர்த்தியுள்ள கர்ம யோகி; நல்விரதர்; செந்தமிழ்ச் செல்வர்; சிறந்த சான்றோர் தலைவர். அவரும் அவரது உற்றார் உறவினரும் ஸ்ரீ ஆண்டாளின் திருவருள் பெற்றின்புறுமாறு அன்னவளடி பணிந்தேத்துவோம். நற்றமிழ் வாழ்க. நல்லார் வாழ்க. பொங்கும் மங்கலம் எங்கும் தங்குக.

"செந்தாமரை வல்லி வில்லிபுத்தூர் வல்லி செழுந்துளப
நந்தார்குழல் வல்லி நாராயணவல்லி நளினவல்லி
இந்தார்குழல் வல்லி யிந்திரலோக நிறைந்தவல்லி
கொந்தார்குழல் வல்லியே கோதைசூடிக் கொடுத்தவளே."

—(பாட்டக்குளம் வித்துவான் ஸ்ரீநிவாஸய்யங்கார் பாடியது)

வேயர்புகழ் வில்லிபுத்தூ ராடிப் பூர
    மேன்மேலு மிகவிளங்க விட்டு சித்தன்
றூயதிரு மகளாய்வந் தரங்க ஞர்க்குத்
    துழாய்மாலை முடிசூடிக் கொடுத்த மாதே !
நேயமுடன் றிருப்பாவைப் பாட்டா றைந்து
    நீயுரைத்த தையொருதிங் கட்பா மாலை
யாயபுகழ் நூறுடனற் பத்து மூன்று
    மன்புடனே யடியேனுக் கருள்செய் நீயே.

—(தேசிகமாலை. பிரபந்தசாரம். 10)

ஸ்ரீரங்க விலாசம்,
திருவல்லிக்கேணி,
12—1—1950.
*“ சிற்றஞ் சிறு காலே.”*

**ப. ரெ. திருமலை அய்யங்கார்,**
*காரியதரிசி.*

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆண்டாள் சந்திரகலாமாலை.



## காப்பு.

விட்டுசித்தன்.

எங்கணெடு மாலாதி யம்பரம னோராயி
ரஞ்சுருதி மேலாயினே
னென்றுகிழி நாவான்முன் வென்றபெரி யாழ்
மின்பமுறு தாள்சூடு வோம் [வார்த
வெங்கரவு சூன்மேவு சங்கலற வால்வீசு
வெண்புனலின் மீதோடு சேல்
விண்கிழிய வேதாவி யும்பர்பதி மீதேறி
விஞ்சையர் கணீராடு நீண்
மங்குலுறு மாகாய கங்கைநதி யூடாடி
வந்துகமு நீரோடை சூழ்
வண்கமுகு மாவாழை கண்டலது தாள்சாடி
வண்டலிடு கான் மேவியே
செங்கயலிரு ல்வாளை கெண்டைகள் வராலாரல்
திண்சுறவு பாய்வாவி சேர்
தென்புதுவை மான்மீது சந்திரக லாமாலை
செந்தமிழி ஞலோத வே.

[பெரியாழ்வார் - "பேரணிந்த வில்லிபுத்தூரானி தன்னிற் பெருஞ்சோதிதனில் தோன்றும் பெருமானே! முன், சீரணிந்த பாண்டியன்றன்னெஞ்சு தன்னில் துயக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி, வாரண மேல் மதுரை வலம் வரவே வானின்மால் கருடவாகனனுய்த் தோன்ற வாழ்த்தும், ஏரணி பல்லாண்டு முதற்பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டு மெனக்குதவு நீயே." (தேசிகமாலை. பிரபந்தசாரம். 9), "அன்று மாறனுட் கிடத்திய வுபநிடதார்த்த, நின்று நீ வெளிப்படுத்தென நெடியமால் பணிப்பச், சென்றுகூடலிற் பிறர் மதத்திரள் களைச் சிதைத்து, வென்று வான்கிழி வீட்டினுர் தாட்டுணை விடேமால்." (கூடற் புராணம். கடவுள் வணக்கம். 5), "வயினதேயன் கலையாய்த் திருவில்லிபுத்தூர் மறை யுணர்ந்த வேயர் குலம் விளங்க விளக்கொளிபோற், பயில்கலி முற்பாதமிதுந ச்சோதி யுதித்தான் பரன் சேனை மன்னடி தாழ்ந்திலக்குமி நாரணனைச், செயுந் திருவாராதனத்தானந்த வனமாலைத் திருப்பணியான் கிழியறுக்க மால்பரம் பல்லாண்டு, மியம்பு வண்ண மாடமு நானூற்றெழுபத்தொரு மூன்றேற்று விண்டு சித்தன் மலரிணையடி கடொழுவாம்." (கூரேசவிஜயம். பொதுப் பாயிரம். 22), "சோராத காதல் பெருஞ்சுழிப்பால் தொல்லை மாலையொன்றும், பாராது அவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்." (இராமாநுச நூற்றந்தாதி. 15), "நல்ல திருப்பல்லாண்டு நான் மூன்றேன் வாழியே நானூற்றறுபத் தொன்றும் நமக்குரைத்தான் வாழியே, சொல்லரிய வானிதனிற் சோதி வந்தான் வாழியே தொடை சூடிக் கொடுத்தாளைத் தொழுமப்பன் வாழியே, செல்வ நம்பிதனைப் போலச் சிறப்புற்றான் வாழியே சென்று கிழியறுத்து மால் தெய்வமென்றான் வாழியே, வில்லி புத்தூர் நகரத்தை விளங்க வைத்தான் வாழியே வேதியர் கோன் பட்டர் பிரான்மேதினியில் வாழியே.", "திருப்

பல்லாண்டென மாலைப் பாடினன் வாழியே செஞ்சொ நானூற்றெழுபத்து மூன்றுரைத்தான் வாழியே, பெருக்க முறு மானிதனிற் சோதி வந்தான் வாழியே பெருமைமிகு மாண்டாளைப் பெற்ற பிரான் வாழியே, மருப் பொசித்த மாதவனே பரனென்றான் வாழியே மாசறப் பாண்டியனை வையிற் கிழியறுத்தான் வாழியே, விருத்தி பெறு வில்லிபுத் தூர் விளங்க வந்தான் வாழியே விட்டுசித்தன் மலர்ப் பதங்கள் மேதினியில் வாழியே.'' (வாழித் திருநாமம்.); ''மறுத்தலை துடைத்தமதி மலர்முகத்தேனுடன் வண் டுளவ மதுமாலையும் மாயவன் றிருமார்பு பொறப்பக் கொடுத்துவள மதுரையிற் றூங்குகிழிதான், அறுத்தலைச் செய்திப வெறுத்தத் துலாப்புரிந் தாரணந் தமிழ்படுத்தி ஆழிமா லிருபதமும் வாழிபா டும்புதுவை யந்தணன் றுடுதிப்பென், கறுத்தலை நெடும்புணரி யேழ்விசும் பேறியிரு கரையழிந் தொழுகிநின்ற கன்மாரி காப்பப் பசுந்தா மரைச் சிறிய கைக்கெண்ட வரையேழுநாள், பொறுத்தலைச் செய்திடையர் சுற்றமுங் கன்றும் புனிற்றாவு நின்றளித்த பொங்கர்த் தடஞ்சோலை மலையலங் காரனைப் புகழுமென் கவிதழையவே.'' (அழகர் பிள்ளைத் தமிழ். பழிச் சினர்ப் பரவல். 2); கரவு - முதலை; வால் - வெண்மை; வெண் புனல் - வெள்ளம்; விண் - ஆகாயம்; விஞ்சையர் - வித்தி யாதரர்; நீண் - நீண்ட; மங்குல் - மேகம் (மங்குல்சூழ் விமான முன்றில் - பாரத. வாரணை. 61); கழுநீரோடை - கல்லார மலர்வாவி; கண்டல் - பலா; வாவி - குளம்; தென்புதுவைமான் - ஸ்ரீ ஆண்டாள்; சந்திரகலா மாலை - சந்திரனது கலை பதினாறு போலப் பதினாறு விருத்தங் களாலான இப்பாமணிமாலை 'சந்திரகலாமாலை' எனப் பெயர் பெற்றது.]

## அவையடக்கம்.

ஆசுமது ரஞ்சித்ர வித்தாரமென வெடுத்
தறையுமிய லிசைநா டகத்
தகவல்வெண் பாகலிப் பாவஞ்சி யிந்நான்கி
னுகியவ கைதொகையினு

லோசைபெறு யாப்புச்சொல் பொருளெழுத் தலங்கார
முறு பஞ்சவதிகார மென்
ரூேதிய விலக்கணத் தேதமி லிலக்கியத்
துள்ளபிர பந்தம்யாவும்

பேசுமுறை யேதுமறி யாதவென் புன்கவிப்
பிழைதீர்த்து மென்ப தெண்ணிற்
பெய்திடு மணற்சோறு தன்னிற்க லாராய்ந்து
பேர்த்துமென லொக்கு மாடத்

தேசுதிகழ் புதுவையுட் கோதையரு ளென்னுமச்
செய்தியை யுணர்ந்தெனது சொற்
செந்தொடைய னன்றெனக்கொண்மி னியல
செந்தமிழ்க் கவிவாணரே. [முதுனுஞ்

[ஆசுகவியாவது - ("மூச்சுவிடுமுன்னே முந்நூறு நானூறும், ஆச்சென்ரு லாயிரம்பாட் டாகாதோ," "இம் மென்னுமுன்னே எழுநூறு மெண்ணூறும், அம்மென்ரு லாயிரம்பாட் டாகாதோ," "எழுந்த ஞாயிறு விழுவதன் முன் கவிபாடின தெழுநூறே," 'நிமிஷக் கவிராயர்' என் னும்படி) விரைவிற்பாடுங்கவி ; மதுரகவி - சொற்பொருள் களின் இனிமையமையப் பாடுங்கவி; சித்திரகவி - பலவகை

மிறைக்கவி விசித்திரங்களமையப் பாடுங்கவி ; விஸ்தார கவி - ஒரு பொருளையே விரித்துப் பாடுங்கவி ; '' மும்மைத் தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூன்றுவகைத் தமிழ்''; தமிழில் வழங்கப் பெறும்பாக்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப் படும். இந்நான்கோடு மருட்பா என்பதனையுஞ் சேர்த்துப் பாக்கள் ஐந்து வகைப்படும் என்பாரும் உளர். '' ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கதிபதியாய் வந்து'' என்பது பாரதச் சிறப்புப்பாயிரம். மருட்பா என்பது வெண்பா முன்னும் ஆசிரியப்பாப் பின்னுமாக வருவதோரியல் புடைய ஒருபா. அஃது இருவேறுபாவின் சேர்வையாய் இரு கூறெனப் படுவதன்றித்தானே தனிநின்று ஒருபா எனப்படுந் தன்மையுடையதன்று. அது பற்றியே அதனை விலக்கிப் பாக்கள் நான்கு வகை என்றே யாப்பருங்கலம் முதலிய யாப்பிலக்கணங்களெல்லாம் எடுத்துக் கூறுவன வாயின. '' வெண்பா வாசிரியங் கலிவஞ்சி யென்ற - பண் பாய்ந் துரைத்த பாநான் காகும்'' என்பது யாப்பருங் கலம் ; '' எழுத்துப் பதின்மூன்று இரண்டு அசைசீர் முப்பது ஏழ்தளை ஐந்து, இழுக்கிலடி தொடைநாற்பதின் மூன்று ஐந்து பாஇனம் மூன்று, ஒழுக்கியவண்ணங்கள் நூறு ஒன்பது ஒண்பொருள்கோள் இருமூ, வழுக்கில், விகாரம் வனப்பு எட்டு யாப்புள் வகுத்தனவே'' என்று தொகுத்து உணர்த்தப்படும் இயற்றமிழ்ப் பாவினிலக் கணங்கள் ; '' ஆசிரியப்பா முதலியவற்றின் வகை முறையே ; நான்கு, ஐந்து, மூன்று, இரண்டு ; ஆகும். தொகை என்பது இவற்றினினமாகிய தாழிசை துறை விருத்தங்களை. நாலோசை யென்றது அகவல், செப்பல், துள்ளல், தூங்கல் ஓசைகளை''; தமிழ்மொழி தான் தோன்றி வழங்கி வருதற்கண்ணே, தன்னை வழங்கும் மக்களது மனோவிருத்திக்கேற்ப முக்கூற்று மொழியா யிற்று. உலக வியவகாரத்திற்குரிய சொற்களும் சொற்

ரூடர்களும் ஆகிய பகுதி 'இயற்றமிழ்' எனப்படுவதாயிற்று. உலக வியவகாரமொழிந்து மனமிளைத்திருக்குங் காலத்திலே தமது மனத்திற்கு ஆற்றியும் கிளர்ச்சியும் ஆனந்தமும் பயக்குமாறு அமைத்துக்கொண்ட இசைக்குரிய இலக்கணங்களும் பாட்டுக்களுமாகிய பகுதி 'இசைத் தமிழ்' எனப்பட்டது. மனமும் சரீரமும் ஒருங்கே களிப்பு அடையுமாறு அமைத்துக்கொண்ட ஆடலும் அதன் பகுதியுமாகிய தமிழ் 'நாடகத் தமிழ்' எனப்பட்டது ; பஞ்சவதிகாரம் - "நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும் பிறவி, நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ நன்னூல் துறைகள், அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப், பஞ்சுக்கனலின் பொறி பரகாலன் பனுவல்களே" என்ற ஆழ்வான் அருளிச் செயல் அநுஸந்திக்க ; ஏதமில்- குற்றமற்ற ; பிரபந்தம் - சந்தமினிய செந்தமிழில் ஒண்ணூல் தொண்ணூற்ரூறு ; பெய்திடு மணற்சோறுதன்னிற் கலாராய்ந்து - மணற்சோற்றில் கல்லாராய்தல் ; புதுவை - "கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர், சோதி மணி மாடந் தோன்றுமூர் - நீதியால், நல்லபத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர், வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்"; தேசுதிகழ்புதுவை - "இருக்கோது மந்தணர் சூழ்புதுவாபுரி யெங்கள்பிரான், மருக்கோதை வாழும் வடபெருங்கோயின் மணிவண்ணனூர், திருக்கோ புரத்துக் கிணையம் பொன் மேருச் சிகரமென்றே, பருக்கோத லாமன்றி வேறுவமானப் பணிப்பில்லையே." (ஸ்ரீ வில்லிபுத்தூர்க் கீழைக் கோபுரத்துக்கண்ட சாஸனப் பாட்டு); கோதை - வில்லிபுத்தூர்ச் செல்வி, சூடிக் கொடுத்த சுடர்க்கொடி ; இயலமதுனுஞ் செந்தமிழ்க் கவிவாணர் - "கவிப்பாவ முதமிசையின் கறியொடு கண்ணனுண்ணக், குவிப்பான்" என்ற ஆழ்வாரந்தாதிப் பாடலை நோக்குக ; "வம்மின் புலவீர்" (திருவாய்மொழி 3-9-6) என்ற ஆழ்வார் பாசுரத்தையும், "வம்மின் புலவீர் அருளாளப் பெருமாள் என்றும்"

(தேசிகமாலை. மெய்விரத நன்னிலத்து மேன்மை. 3) என்ற தூப்புல் வேங்கடநாதன் பாசுரத்தையும் ஈண்டு குறிக் கொள்க.]

## நூல்.

பூமாதெனத் தேவர் போற்றிடத் தவர்முனிவர்
புண்ணியம் பலமிதென்னப்
புவியோர ஊனத்துலகு மீன்றதா யெனவறிஞர்
போதமிகு செல்வமெனவே

நாமாதெனப் புலவர் கொண்டாட வாழ்வார்க
ணங்குலம டந்தையென்ன
நந்திருவ ரங்கேசர் தந்திருத் தேவியென
நானிலத் தவதரித்தாய்

பாமாறன் முத்தமிழ்த் திருவாய் மொழிப்பனுவல்
பாராட்டி யாராட்டிடப்
பள்ளிதுயில் கொள்ளுமென் கிள்ளைக்கு வள்ளப்
பசுந்தேற லூட்டிமெள்ளத்

தேமாநறுங் கனிய ருத்திக் கருத்துடன்
செங்கையி லிருத்திவேதத்
திருப்பாவை முப்பதும் விருப்பாய்ப் பயிற்றிடுந்
திருமல்லி வளநாடியே. (1)

[எல்லா நூற்கும் மங்கல மொழி முதலில் வகுத்துக் கூற வேண்டும் என்பது இலக்கணம் ஆதலால், 'பூ' என்று தொடங்கினர்; இச்சொல் மங்கல மாதலை

"சீரெழுத்துப் பொன்பூதிருமணிநீர் திங்கள் சொற், கார் பரிதி யானை கடலுலகம் - தேர்மலைமா, கங்கைநிலம் பிறவும் காண்டகைய முன்மொழிக்கு, மங்கலமாஞ் சொல்லின் வகை." என்றதனுலும் அறிக. ஆறிருவர் ஓரொருவர் அவர்தாம் செய்த தூய்ய தமிழ் இருபத்து நான்கென வகுக்கப் பெற்ற நாலாயிரத்தில் பிரபந்த காயத்திரியெனப் பேர்பெற்று விளங்கும் இராமாநுச நூற்றந்தாதி "பூமன்னு மாது" எனத் தொடங்கி யிருத்தல் காண்க. பூ - தாமரைப் பூ, "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" (நால்வர் நான்மணி), பூமி, "பூவிற் புனலிற் பொருப்பில் வாழும்" (இராமா. சூர்ப்பந. 68); பூமாது - இலக்குமி, ஸரஸ்வதி, பூமிதேவி, மலர்மங்கை, "பூமாதினிதய கமலத்து வைகும் பொலிவானும்" (திருவா. நான்மணி); தேவர் - சுரர், இவர் சன்மதேவர், கன்மதேவர் என இருதிறத்தினர் ; போற்றிட - துதிக்க, காப்பிட ; தவர் முனிவர் - விருத்தி நிஷ்டர், குண நிஷ்டர் : முனிவர் - மனனசீலர் ; புண்ணியம் - நலமானது, உபாயம் ; பலம் - பயன், உபேயம் ; புவி - பூமி ; போதம் - ஞாநம் ; "குணங்கடந்த **போதக்** கடல் எங்கள் தென்குரு கூர்ப்புனிதன்" என்பது சடகோபரந்தாதி. (1) (குணங்கடந்த போதம் - எண்ணிலாக் காட்சி, அநந்த ஞானம். குணம் - எண் கூட்டிப் பெருக்குதல். போதக் கடல் - ஞானம் நிறைந்த கடல். குணம் கடந்த - கருணை முதலிய சாத்துவிக குணங்களின் முடிவெல்லையில் நின்ற. அருள், ஐம்பொறியடக்கல், தவம், பொறுமை, மெய்யுணர்வு, மேன்மை, மௌனம், வாய்மை என்ற எட்டும் சாத்துவிக குணம் என்னப்படும்); போதமிகு செல்வம் - ஞானமாகிய பரம ஐசுவரியம் ; மிகு செல்வம் - மிகவும் அதிகமான செல்வம் ; நாமாது - நாமகள், சரச்சுவதி ; புலவர் - அறிஞர், கவிவாணர் ; குலமடந்தை - குலமகள் ; ஆழ்வார்கள் நங்குலமடந்தை யென்ன - "அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள், தஞ்செயலை விஞ்சிநிற்குந்

தன்மையளாய் - பிஞ்சாய்ப், பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும், வழுத்தாய் மனமே மகிழ்ந்து.'' என்பது உபதேசரத்தினமாலை (24). ("அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய் - 'ஸந்தாநபீஜம் குருபாண்டவா நாம்' என்று பாண்டவர்கள் ஐவர்க்கும் பரீக்ஷித்து ஒருவனும் ஸந்தாந பீஜமானாற் போலே இவளும் ப்ரபந்நகுலமான ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருமகளாம்படியான ஒருமகளா யிருக்கை. இவள்தான் ஜ்ஞான ஸந்தாந ப்ரஸூதையாகையாலே "குலமகள் கோதை" என்றே கூறிவைத்தார்கள்."); ஆழ்வார்கள் - எம்பெருமானுடைய திவ்ய மங்கள குண கணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி ஈடுபட்டு நன்ருக ஆழ்ந்திடுபவராகிய பரம பாகவதர்கள்; திருமாலின் அபிநவ தசாவதாரம் எனக் கொண்டாடப் பெற்று வரும் இவ்வாழ்வார்கள் பதின்மர் என்ப. இவர்களின் அடைவை "பொய்கை முனி பூதத்தார் பேயாழ்வார்தண் பொருநல் வருங் குருகேசன் விட்டு சித்தன், துய்யகுல சேகரனம் பாண நாதன் தொண்டரடிப்பொடி மழிசை வந்தசோதி, வய்யமெலா மறைவிளங்க வாள்வேலேந்து மங்கையர் கோன் * * *'' (தேசிகமாலை. அதிகாரச் சுருக்கு. 1); "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை, அய்யன் அருள்மாறன் சேரலர் கோன் - துய்யபட்ட, நாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நற்கலியன், ஈதிவர் தோற்றத் தடைவாம் இங்கு.'' (உபதேசரத்தினமாலை. 4) என்ற பாசுரங்களிற் காண்க.; தேவி - தலைவி; நானிலம் - நால்வகை நிலம். அவை குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்பன. இப் பகுப்புப்பற்றிப் பூமிக்கு நானிலம் எனப் பெயர் கூறுவர்; பா - பாட்டு. அது வெண்பா முதலியனவாம்; பாமாறன் - நம்மாழ்வார், "புகழ் மலிந்த பாமன்னுமாறன்'' என்பது ப்ரபந்நகாயத்ரி (1), உலக நடைக்கு மாருக இருந்ததனுல் 'மாறன்' என்று திருநாமம் சாத்தப் பெற்றவர்; முத்தமிழ் - இயல் இசை நாடகம்

என்னும் மூவகைத் தமிழ்; திருவாய் மொழி - "அரு மறைகள் அந்தாதி" (ஈச்வர முனிகள்). "ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ் வேதம்" (அநந்தாழ்வான்). "வான்திகழும் சோலை மதிளரங்கர்வண் புகழ்மேல், ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்" (பட்டர்). "மிக்க விறைநிலையும் மெய்யா முயிர் நிலையும், தக்க நெறியும் தடையாகித்-தொக்கியலும், ஊழ்வினையும் வாழ் வினையும் ஓதும் குருகையர் கோன், யாழினிசை வேதத்தியல்." (பட்டர்); ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் திருவாய் மொழியில் ஆதியில் இருபத்தொன்று பாசுரங்கள் நான்கு அத்யா யங்கள் கொண்ட ப்ரஹ்மஸூத்ரத்தின் அர்த்தத்தைத் தெளி வாக விவரிப்பதைக் கொண்டு ரிக்வேத ஸாரமென்றும், கானத்தோடு சேர்ந்த ஆயிரம் பாசுரமாயிருப்பதைக் கொண்டு கானப்ரதானமாயும் ஆயிரம் சாகையாயும் இருக்கும் ஸாமவேத ஸாரம் என்றும், ஸ்ரீய: பதியே உபாயமும், ப்ராப்யமும் என்று ப்ரதான ப்ரதி பாத்யமான ஓரர்த்தத்தோடு சேர்ந்த நூறு திருவாய் மொழிகளைக் கொண்டு நூறு சாகையான யஜுர்வேத ஸாரமென்றும், ச்ருங்காரம் முதலிய ஒன்பது ரஸங்களை ப்ரதிபாதனம் பண்ணும் க்ரமத்தை அநுஸரித்து ஒன்பது சாகையான அதர்வண வேத சாரமென்றும், இத் திருவாய் மொழி தன்னையே நான்கு வேத ஸாரமாக நிர்வகித்தார். திருவாய் மொழி என்பது திரு, வாய்மை, மொழி என்ற சொற்க ளாலான சொற்றொடர். இது சிறந்த வேதம் என்றும், சிறந்த மாறுபாடில்லாத சொல் என்றும் பொருள்படும். 'வாய்மொழி' என்னும் சொல் 'பரிபாடல்' என்னும் பண்டைச் சங்கச் செய்யுளிலும் 'வேதம்' என்னும் பொருளில் வந்துள்ளது. "வாய்மொழி முதல்வ நின்று ணிழறொழுதே" (வேத முதல்வ! நின்திருவடியைத் தொழுது பரவுகின்றோம்), "மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம், மாயா வாய்மொழி யுரைதர வலந்து, வாய்

மொழி யோடை மலர்ந்த.'' ('' மாயோய் ! இவையெல்லாம் நின்கட் டோன்றிப் பரந்தவையாகத் தொடுத்துக் கூறினேம், வேதம் சொல்லுதலான். நித்தமாகிய வேதம், தேவரும் மூவேழுலகுகளும் உயிர்ப் பன்மையும் நின்கட்டோன்றிய வாறு அறிந்து கூறும்; சிற்றறிவினேமாகிய யாம் அவற்றுட் சிலவற்றை முறை பிறழக் கூறுவதல்லது அவ்வாறு எல்லாம் கூறுதற்கு உரியமல்ல மென்பார் வலந்துரைத்தே மென்றார். தாமரைப் பூப்படைப்பிற்கு முதலாக வந்து மலருமென் பதற்கு, வேதம் ஞாபக வேதுவாதலின், அதற்கு அதனை ஓடையாக உபசரித்துக் கூறினார். உப நிடதத்தின் பொருள் பொருந்தும் கூற்றாற் கூறுகின்றாராகலின், 'வாய்மொழி யோடை' என்றார். ஒரோவழி அவ்வரு மறைதானும் அவனை அவ்வாறு கூறுமாதலின், அதன் கூற்றெனவும் அமையும்'') என்ற பரிபாடலடிகளையும் அவற்றின் உரையையும் நோக்குக. 'வாய்மை' என்பது 'மாறு பாடில்லாதது' என்னும் பொருளில் திருவள்ளுவர் ஆண் டுள்ளார். திருக்குறளில் 'குடிமை' என்ற அதிகாரத்தில் '' நகையீகை யின்சொ லிகழாமை நான்கும், வகையென்ப வாய்மைக் குடிக்கு.'' (953) இதற்குப் பரிமேலழகர் உரை வருமாறு :—'' வாய்மைக் குடிக்கு - எக்காலத்துந் திரிபில் லாத குடியின்கட் பிறந்தார்க்கு ; நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப - வறியார் சென்ற வழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர். பொய்ம்மை திரிபுடை மையிற்றிரிபின்மையை வாய்மை யென்றும், இல்லாரை யெல்லாரு மெள்ளுவராகலின் இகழாமையை அவர் கூறாக் கியுங் கூறினார். குடி ஆகுபெயர். நான்கின் வகை யென்பது பாடமாயின், வாய்மைக்குடிப் பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந்நான்கானுளதா மென்றுரைக்க. இவை மூன்று பாட்டானுங் குடிப்பிறந்தாரதியல்பு கூறப்

பட்டது.'' இச்செய்யுளில் "வாய்மை" என்ற சொல் லுக்கு "எக்காலத்துந் திரிபில்லாத" (மாறுபாடில்லாத) என்று பரம வைணவ சிகாமணியாகிய பரிமேலழகர் பொருள் செய்திருப்பதைக் காண்க. வேறெதற்கும் இல்லாத தனிச் சிறப்பு இந்நூலுக்கு உண்டு. இச்சீரிய நூலை இயற்றியருளிய பெரியார் ஏனையோரினும் சிறந்து நம்மவர் என்று போற்றத்தகுந்த பெருமை வாய்ந்து நம் ஆழ்வார் என்று வழங்கப் பெற்றார். திருக்குறள் உரையாசிரிய ராகிய பரிமேலழகியாரும் "இறைமாட்சி"யை விளக்கு கின்ற இடத்தில், "39-ஆம் அதிகாரம், இறைமாட்சி. அஃதாவது அவன்றன் நற்குண நற்செய்கைகள். உலக பாலருருவாய் நின்று உலகங் காத்தலின், இறையென்றார்; "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார்." என இவரைப் பெரியார் என்று குறித்துள்ளது குறிப்பிடத் தக்கது. "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும், உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந்தானென்று துள்ளும், கருவுடைத் தேவில்க ளெல்லாம் கடல் வண்ணன் கோயிலே யென்னும், வெரு விலும் வீழ்விலுமோவாக் கண்ணன் கழல்கள் விரும்புமே." என்பது ஈண்டுக் காட்டப் பெற்ற திருவாய் மொழி (4-4-8) ப்பாசுர முதலடி. இதனால் இத்திருவாய் மொழி இவ ரியற்றிய ஏனைய பிரபந்தங்களிலும் சிறப்புடையது என்ப தும், நம்மாழ்வார் ஏனைய ஆழ்வார்களினும் சிறந்தவர் என்பதும் இனிது விளங்கும். சொற்பொருட் சுவை மிகுதி யானும் தத்துவப் பொருட் செறிவானும் தலை சிறந்து விளங்குவது திருவாய் மொழி. "தெள்ளமிர்தத் துள்ளாய தீஞ்சுவையை மெய்வேதத், துள்ள வுணர்வை யுணர் விஞல்—அள்ளி, எடுத்திசைத்த தொன்றெனலாம் இன் பொருளான் மாறன், தொடுத்திசைத்த உத்தமப்பாச் சொல்." (மாறனலங்காரம்) (தேவாமிருதத்தின் இன்

சுவையையும் வேதத்தின் நன்பொருளையும் சேர்த்துக் குழைத்து அமைக்கப் பெற்ற உத்தமப் பாசுரங்களே திருவாய் மொழி. அது கற்பதற்கு மிக்க இனிமையும் பொருட் பெருமையும் உடையது.); திருவாய் மொழிப் பனுவல்—திருக்குரு கூர்க்குத் தலைவராகிய ஆழ்வாருடைய திருவாய் மலரினின்று வெளிப்பட்ட சொற்களாகிய திருவாய் மொழி முதலிய பிரபந்தங்கள். திருவாய் மொழி 'ஆயிரமா மறைக்கும் அலங்காரம்; அருந்தமிழ்க்குப் பாயிரம்; நாற்கவிக்குப் படிச்சந்தம்; பனுவற்கு எல்லாம் தாய்; இருநால் திசைக்குத் தனித்தீபம்; சித்தர்க்கும், வேதச்சிரந் தெரிந்தோர்கட்கும், செய்தவர்க்கும், சுத்தர்க்கும், மற்றைத் துறை துறந்தோர்கட்கும், தொண்டு செய்யும் பக்தர்க்கும், ஞானப்பகவர்க்கும், பண்டு சென்ற முத்தர்க்கும் இனிய அமிருதம் போல இன்சுவை விளைப்பது; துறவாதவர்க்கும் துறந்தவர்க்கும் சொல்லவே சுரக்கும் அறம் ஆ அவை ஓர் ஆயிரம்; ஆராவமுதங்கவி ஆயிரம்; பழம்; பசுங்கற்பகத்தின்பூ; பொரு கடற் போதா அமுது; பொருள் சுரக்குங்கோ; தென்தலைத் தோன்றிய உபநிடதம்; ஆயிரமோக்கமாலை'. பநுவல்-இசைப்பாட்டு, கல்விநூல்; பள்ளி-இருப்பிடம், விலங்குதுயிலிடம்; துயில்-நித்திரை. 'வைகறைத்துயிலெழு'; வள்ளம் - வட்டில்; தேறல் - தேன்; தேமா- தித்திப்பு மாமரம்; வேதத்திருப்பாவை - கோதோபநிடதம். "போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினிற்றூசாகும்" என்று உபநிஷத்துச் சொன்னபடி" (ஸ்ரீ வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸ்ரீரஹஸ்ய ஸந்தேச விவரணம்); திருப்பாவை முப்பதும்-சங்கத்தமிழ் மாலை முப்பதும்," "திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே"; பயிற்றி - பலகாற் கூறி. பயிற்றல் - கற்பித்தல்; திருமல்லிவளநாடி - "அல்லி நாள் தாமரை மேலாரணங்கினின் துணைவி, மல்லிநாடாண்டமடமயில்-மெல்லியலாள், ஆயர்குல வேந்தனாகத்தாள் தென்புதுவை,

வேயர்பயந்த விளக்கு''. ''கோலச்சுரி சங்கைமாயன் செவ் வாயின் குணம்வினவும், சீலத்தனள் **தென்திருமல்லிநாடி** செழுங்குழல்மேல், மாலைத் தொடைத்தென்னரங்கருக்கீயும் மதிப்புடைய, சோலைக்கிளி அவள் தூய நற்பாதம் துணை நமக்கே.'' (தையொருதிங்கட்பாமாலைத் தனியன். திருக் கண்ணமங்கை யாண்டான் அருளிச் செய்தது.) ''பட்டர் பிரா னென்னும் படப்பையருங் கற்பகத்தின், இட்டு வளர் கொடியா யிந்திரையாய்க்-கட்டழகின், மண்டலமாய் வண் பொறையின் மாலுக்கே மாலளிக்குந், தண்டமிழ் செய் கோதாய் சரண்.'' (கோதாஸ்துதி, 1.)]

அளிக்கும் பரஞ்சோதி வைகுந்த வாஞட்டி
லானந்த விளையாடல்விட்
டர்ச்சாவ தாரத்தை யாதரித் தேத்துதிரு
வாடித் திருப்பூர நாள்

குளிக்குந் தடஞ்சுனைப் புதுவையி னறுந்துழாய்க்
குடிலில் வந் தவதரித்துக்
கொண்டறவழ் வடபெருங் கோயில ருவந்திடக்
கோதைசூ டிக்கொடுத் தாய்

பளிக்குமணி மண்டபத் தூடாடி நிச்சலும்
பலகணி நுழைந்து மேடைப்
பள்ளிதுயில் கொள்ளிளைஞர் புல்லுமட வார்முலை
பரிமள முகந்து செந்தேன் [ப்

றெளிக்குமம் பூங்கா வனத்தி லைப்பாறிச்
சிறந்ததிரு மாளிகைதொறுந்
தென்றற்ப சுங்குழவி மன்றத்த வழ்ந்துவரு
திருமல்லி வளநாடியே. (2)

[பரஞ்சோதி - (பரம - மேலான, சோதி - ஒளி) ஸ்ரீ வைகுண்டநாதன் ; வைகுந்தம் - வைகுண்டம். ' தயங் கொளிசேர்வைகுந்தம் ' என்பது காண்க ; வானாடு - தேவ லோகம், பரமபதம் ; விளையாடல் - விளையாடுதல் ; அர்ச்சா வதாரம் - " அர்ச்சாவதாரமாவது - தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே, தமருகந்ததெப்பேர் மற்றப்பேர், நெஞ்சி னால் நினைப்பானெவனவனாகு நீள்கடல் வண்ணனென்னும் படி ஸ்வயம் வ்யக்ததிவ்யார்ஷ வைஷ்ணவ ஸ்தாநங்களிலே ஸர்வஸஹிஷ்ணுவாய், அர்ச்சகபாரதந்த்ரியத்திற்கு எல்லை நிலமாய் சேஷசேஷி பாவ சபளமாய் பூமௌகதம் பூஜ்ய தாமப்ரமேயம் என்று தானேயருளிச் செய்த ரூபம். தன்னு ளேதிரைத் தெழுந்து இத்யாதிகளிற்படியே நிற்கிற இவ் வஞ்சு ரூபமும் அகலகில்லேனிறையுமென்றலர் மேல்மங்கை யுறையும் படியான சுபாச்ரயமாயிருக்கும். " (தத்வமாத் ருகா.) " பரவ்யூஹாதிரூபங்கள் தானே யாச்ரிதர்க்காகவவர் களபேக்ஷித்த படியிலே ' பிம்பாக்ருத்யாத்மநாபிம்பே ஸமா கத்யாவதிஷ்டதே ' என்கிறபடியே நிற்கிற நிலை அர்ச்சாவ தாரம். " (ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம். தத்வத்ரய சிந்த நாதி காரம்.) எம்பெருமான் வடிவு ஐந்து. பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என்பன அவ் ஐவகை நிலைகள். இவற்றில், பரத்வமாவது - பரமபதத்தில் எழுந் தருளியிருக்கும் நிலை. வியூகமாவது - வசுதேவசங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நான்கு ரூபத்துடன் திருப் பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் நிலை. விபவம் - ராம கிருஷ்ணாதி அவதாரங்கள். அந்தர்யாமித்வம் - சராசரப் பொருள்கள் எல்லாவற்றுள்ளும் எள்ளினுள் எண்ணெய் போல மறைந்து வசித்தல் ; அடியார்களின் மனத்தில் வீற் றிருத்தலும் இதில் அடங்கும். அர்ச்சை - விக்கிரக ரூபங் களில் ஆவிர்ப்பவித்தல். " வலனேங்கு பரமபத மாமணி மண் டபத்திலமர், நலனேங்கு பரம்பொருளாய் நான்கு வியூ கமுமானாய், உபயகிரிப் புயராம னெடு கண்ணன்

முதலான, விபவவுருவமு மெடுத்து வீறுமுயிர்தொறுங் குடிகொ, ளந்தரியாமியுமான தமையாமே யெளிதாக, இந்த நெடு வேங்கடத்தி லெல்லோருந் தொழ நின்றேய்.'' என் பதை நோக்குக. பரத்வமும் வ்யூஹமும் தேசத்தினால் மிக வும் சேய்மையனவாதலால் அவைகள் காணமுடியாதன வாம் ; விபவ நிலையோ தேசத்தினுற் சேய்மை யதன்றுயி னும் அக்காலத்தார்க்கன்றிப் பிற்பாடரான நம்மாற் காண விரகில்லை; அந்தர்யாமித்வமோ தேசம் காலம் என்ற இரண் டினுலும் சேய்மையதன்றுயினும் ஞானதிருஷ்டியினு லன்றி வேறு வகையாற் காண இயலாது ; ஆகையால், அஜ் ஞரான நமக்கு அதுவும் பயனற்றதேயாம் ; ஆகவே, ஒரு வகையாலும் அருமைப்பாடின்றி ஆங்காங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கின்ற அர்ச்சையே நமக்கெல் லாம் எளிதில் அடைந்து ஈடேறுதற்கு உரியது. "த்ரு ஷார்த்தனுக்கு (நீர்வேட்கையுடையவனுக்கு) தேசாந்தரத் திற் போக வேண்டாதபடி நிற்கிற இடந்தன்னிலே உண்டா யிருக்கச் செய்தேயும் கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினாலல்லது குடிக்கக்கிடையாத பூகத ஜலம் போலே யாயிற்று, கண்டு பற்றவேணு மென்று ஆசைப்பட்டவ னுக்கு ஹ்ருதயத்திலே யிருக்கச்செய்தேயும் 'கட்கிலீ' என்கிறபடியே கண்ணுக்கு விஷயமன்றிக்கே அஷ்டாங்க யோக ரூபயத்நத்தாலே காணவேண்டும்படியான அந்தர்யா மித்வம். அவனுக்கு (தாகித்தவனுக்கு) அண்டத்துக்குப் புறம்பேபெருகிக்கிடக்கிற ஆவரண ஜலம்போலேயாயிற்று இவனுக்கும் (பற்றவேணுமென்று ஆசைப்பட்டவனுக்கும்) "அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது'' என்கிற படியே லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்வம். அப் படி அதிவிப்ரக்ருஷ்டம் (தூரத்திலுள்ளது) அன்றியே அண்டாந்தர்ப் பூதமாயிருக்கச் செய்தேயும் அவனுக்கு துஷ்ப்ராபகம் (அடைவதற்கு அரியது) ஆன பாற்கடல் போலேயாயிற்று, இவனுக்கும் "பாலாழி நீ கிடக்கும்

பண்பை யாங்கேட்டேயும்'' என்கிறபடியே கேட்டிருக்கு மித்தனையல்லது சென்று காண அரிதாம்படியிருக்கிற வ்யூஹம். ப்ரத்யாஸந்நம் (கிட்டியது) ஆயும் தாத்காலி கர்க்கு உப ஜீவ்யமாய் பாச்சாத்யன் (பிற்காலத்தவன்) ஆனவனுக்குத்துர்ல்லபமான பெருக்காறுபோலே யாயிற்று ''மண் மீதுழல்வாய்'' என்கிறபடியேபூமியிலே அவதரித்து ஸஞ்சரித்தும் தத்கால வர்த்திகளுக்கு ஆச்ரயணீயமாய்ப் பிற்காலத்திலுளனை இவனுக்குக் கிட்டாதபடியான விப வம். முன்பு சொன்னவை போலன்றிக்கே அவனுக்கு விடாய்கெடப் பருகலாம்படி பெருக் காற்றிலதேங்கின மடுக் கள் போலே யாயிற்று, இவனுக்கும் தேசகாலகரண விப்ரக் ருஷ்ட மன்றிக்கே கோயில்களிலும்,க்ருஹங்களிலும் எங்கு மொக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற பின்னானர் வணங்குஞ் சோதியான **அர்ச்சாவதாரம்.''**; திருவாடித்திருப்பூரநாள் - ' திருவாடிப்பூரத்துச் செகத்துதித் தாள் வாழியே' என்பது நோக்குக; குடில் - சிறு வீடு; அவதரித்து - திருவவதாரஞ் செய்து. ''பாண்டிநாட் டினிற்சதுர கிரியருகில் வில்லிபுத்தூர்ப் பதியொன் றுண்டு, கூண்டியல்வே தியர்வசிக்கு மாண்பதுநா ராய ணன்வாழ் கோயில் வாய்ந்த, தாண்டிகலோ கஞ்செய்தவப் பயனேபோன் ஞெருபெரியோ னவதாரஞ்செய், தீண்டிய நான் மறைச்சடங்கொவ் வொன்ருக நடப்பவளர்ந் திலங்கி ஞனே.'' (1), ''பத்தியுஞா னமுந்தவமும் பட்டர்பிரா னெனும்பெயரும் படைத்து நல்ல, சித்திமுத்தி தருந்துணை யாந் திருவெழுத்தோ ரெட்டுநனி செபிப்போனுகி மத்தி யிற்றன் மரபினரால் வடமீனேர் மனையாளும் வாய்க்கப் பெற்றிட், டித்திறமாங் குறுநாளிற் பாமாலை பூமாலை யிரண் டுஞ் செய்து.'' (2), ''கரும்பாந்தண் மிசைநடிக்குங் கமல மலர்ச் சேவடிக்கே கனிந்துசாத்தித் திரும்பாத வீடுபெறச் சிந்தித்து வருநாளாந் திருநாளொன்றிற், பெரும் பார்மின் ஞெருசிறிய மகவாய்நந் தாவனத்தோர் பிருந்

தைமீது, வரும்பானு வெனக்கிடந்து வாய்விடக்கண் டெடுத்துவந்து மனைபாலீந்தான்.'' (3), "அம்மகளை, யவள்கரத்தில் வாங்குதலு மிமயமலை யரசன்றேவி, மைம் மலை நேர் கவுரியினைப் பெறுநாளின் மகிழ்ந்தாங்கு மகிழ்ந் தாள்கொங்கைச், செம்மணிக்குன் றருவியெனப் பால் சொரிந்த தருத்தியணை சேர்த்துப்போற்றி, யெம்மதுமா தவப்பயனே யிறும்பூதே யெனத்தாலாட் டிசைத்தா ளன்றே.'' (4), "பொற்றும நாபியினுன் புணர்மனையாய் நான்முகவன் புதல்வியாய்ப்பொன், விற்றுங்கு புயத்தொரு வன் விடுந்தேரா யெண்டிசையின் மேவியாளப், பெற்றுரை முனிவரரை மானிடரைச் சராசரத்தின் பெருக்கந்தன்னை, நற்றுயாய்ப் பெறுமவளை மகவெனக்கொண் டார்பெருமை நவில்வாரியாரே.'' (5) (புலவர் புராணம், விட்டுணுசித்தர் சருக்கம்.); கொண்டல் - மேகம்; கோதை சூடிக்கொடுத் தாய் - "பூமாலைசூடிக் கொடுத்தாள்", "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி," "பாமாலை யினும்பகர்ச்சி யினும்வெகுவாக் கண்ணனிசை பயின்றுன் கேட்டுப், பூமாதி னங்கிசமாம் புத்திரியு மவன்மோகம் பொலியக்கொண்டா, டாமாவந் தெவரேனும் விழைந்தாலு மவர்வெறுக்கத் தடுஞ்சொற் சொன்னு, ளாமாறு தானுமவன் வைபவமா தியகவியி லமைத்திட்டாளே.'' (11), "அந்தரிகைக் கூறையும்பொற் பணிமுதலா வனவுமெடுத் தணிந்துதன்முன், வந்தநெடு மாயனுக்கு மணஞ்சூட்டன் முதற்கனவு மலியக்கண்டாள், சந்ததம்வந் தவன்றனைத் தொட் டணையுமின்பச் சுவை தெவிட்டித் தளர்ச்சி தீர்ந்தாண், முந்தவணைந் துய்ந்த விடைச் சியருடல்வா சமும்விழைந்து முதிரப் பெற்றுள்.'' (12), "அப்பருவந் தனிற்றனது தாதைநெடு மாற்கெனச் செய் யலங்கலியாவுந், தப்பறத்தான் சூடியெழிற் றருப் பணத்திற் பார்த்தொருவர் தாமும் பாரா, தொப்பறுஞ்சீர்க் குடலையினுண் முன்னிருந்த வாறுதின முய்த்துவந்தா, ளெப்பரிசா லோவொருநா ளிதுசெயச் சோம் பினள

வற்றை யிவன்கொண் டுய்த்தான்.'' (13), "அந்நாளின் மால்பலரு மறியவொரு மானிடன்மே லாவேசித்திட், டிந்நாளிம் மாலைகளி லொன்றுமுவந் திலனின்மக ளெனும் பூங்கோதை, யெந்நாளும் போற்சூடிக் கொடுத்திலளா லெனச்சொன்ன னிதுதேர்ந்தந்த, மின்னுள்சூ டியமலர் கட் களைந்தேநா ரணன்முடிமேல் வேய்ந்துவந்தான்.'' (14), "அன்றுதொட்டிந் நாளுமினி மேலுமெழில் வில்லி புத்தூ ராண்டாள் பூண்ட, மென்றுணர்மா லிகையினைக் கொண் டியாவனெவ்விட் டுனுதலத்தின் மேவினுலு, நன் றுணர்பாகவதர்குழா நாண்மலரிற் சீர்த்ததென நண்ணி யேற்றுப், பொன்றுலங்கு மார்புடையான் புயநிறையின் மணிமுடியிற் புனையுமம்மா.'' (15) (புலவர்புராணம், விட்டுணுசித்தர் சருக்கம்.); நிச்சல் - நித்தமும், நித்தல் நிச்சல் என்றாயிற்று; பலகணி - சாளரம், சன்னல்; புல்லு தல் - பொருந்துதல், தழுவுதல், புணர்தல்; மடவார் - பெண்கள்; பரிமளம் - மிகுமணம்; முலை - கொங்கை; முகந்து - வாரி, 'ஆழியுள்புக்கு முகந்துகொடுஆர்த் தேறி' என்பது திருப்பாவை; பூங்காவனம் - பூஞ்சோலை, நந்தவ நம்; தென்றல் - தென்காற்று, "தென்றற்கோன் - தென் றல்தோன்றும் பொதிய மலைக்குத் தலைவன். பாண்டியன்.''; தென்றற் பசுங்குழவி - மந்தமாருதம்; அளிக்கும் பரஞ் சோதி வைகுந்த வானுட்டி லானந்த விளையாடல் விட் டர்ச்சாவ தாரத்தை யாதரித் தேத்து திரு வாடித் திருப்பூர நாள்—"இன்றோதி ருவாடிப் பூரமெ மக்காக, அன்றோவிங் காண்டாள வதரித்தாள் - குன்றாத, வாழ்வான வைகுந்த வான்போகந் தன்னையிகழ்ந்து, ஆழ்வார் திருமகளா ராய்.'' (உபதேசரத்தினமாலை. 22). ("ஸ்ரீமத்தான ஆடிமாஸத்தி லுள்ள பூரநக்ஷத்திரமானது இன்றைய தினம்; ஆச் சர்யம்; இந்த தினத்தில் ஆண்டாளானவள் க்ஷயிஷ்ணு வாகாத வாழ்வையுடைய ஸ்ரீ வைகுண்டத்திலுள்ள மஹத் தான போகத்தை இழந்துவிட்டு ஆழ்வார்களுடைய பெண்

பிள்ளையாக நம்முடையஉஜ் ஜீவநார்த்த மன்றோதிருவ வதாரம் பண்ணினாள். இருபத்திரண்டாம் பாட்டு. கீழ்ச் சொன்ன மூவரிலும் வைத்துக்கொண்டு, அவர்களிலும் அதிகையான ஆண்டாளுடைய வைபவத்தை மூன்று பாட்டாலே அருளிச்செய்வாராக ஆரம்பித்து அதில் இப் பாட்டில் ஸ்வாநுபவத்தையும் நெகிழ்ந்து அஸ்மதுஜ்ஜீவ நார்த்தமாக ஆண்டாள் அவதரித்தருளின திருவாடிப்பூரம் இன்றோவென்று அதிசயித்து அதிலே ஈடுபட்டருளுகிறார். இன்றோ திருவாடிப்பூரம் - திருவாடிப் பூரமென்று ப்ரஸித்த மான திரு நக்ஷத்ரமின்றோ? இப்படி யிருப்பதொரு நாள் நமக்கு லப்யமாயிற்றது இன்றோ? அலப்யமானது லபித் தால் அதுதான் ஈடுபாட்டுக்கு ஹேதுவாயிறே யிருப்பது. இதுக்கு ஹேது இன்னதென்கிறது மேல். எமக்காகவன்றோ இங்காண்டாள் அவதரித்தாள் - ப்ரஜை கிணற்றிலே விழுந் தால் ஒக்கக்குதித்து எடுக்கும் தாயைப்போலே ஸம்ஸாரமக் நரான நம்மை எடுக்கைக்காகவன்றோ ஸர்வலோக ஜநநி யானதான் இவ் விபூதியிலே வந்து அவதரித்தருளிற்று. "கூபத்தில் வீழுங்குழவியுடன்குதித்தவ் வாபத்தை நீக்கு மந்த அன்னையைப்போல்" என்றும், "கூபாந்தர்முக்த புத்ரம் பதிதமநுபதந் மாத்ருவத்" என்றும் சொல்லுகிற படியே ஜ்ஞாநாதிகரான இவரும் இவ்வவதாரத்தை ஸ்வார்த் தமாக அநுஸந்தித்தருளுகிறார். இனி இப்படி அவதரிக் கையிலுண்டான அருமையைச் சொல்லுகிறது 'குன்றாத' இத்யாதியால். அல்லாதாருடையவும் போகங்களைப்போலே க்ஷயிக்கையன்றிக்கே அகுண்ட வைபவத்தை யுடைத் தான ஸ்ரீ வைகுண்டத்தில் நிரவதிக பகவதநுபவமாகிற மஹாபோகத்தைஉபேக்ஷித்து இங்கும் "போகத்தில்வழுவாத புதுவையர்கோன் கோதை" என்னும்படி ஆழ்வார் திருமக ளாராய்த்து அவதரித்தது. ராஜமஹிஷியானவள் ராஜா வினுடைய பூம்படுக்கையைக் காற்கடைக் கொண்டு ப்ரஜை யினுடைய தொட்டிலைக் கட்டிக்கொண்டு கிடந்து

நோக்குமா போலேயாய்த்து இவளும் நித்யவிபூதியில் நிரதிசயாநந்தத்தை நெகிழ்ந்து இங்கே அவதரித்துப் போந்தது. இதுவே இவர் திருவுள்ளத்தை இப்படி வருத்தப்பண்ணுகிறது.'' மன்ற - அசைச்சொல்.]

சுந்தரத் தோளழகர் மாலிருஞ் சோலையிற்
சொற்பசுங் கிள்ளையாகிச்
சோதிமணை வாளர்தங் காவிரிநதித் துறைத்
தூயமட வன்னமாகிக்

கொந்தவிழ் மலர்ச்சுனைக் கோனேரி யப்பனருள்
கொண்டதிரு வேங்கடப்பொற்
குன்றத்தி லேற்றிய விளக்காகி வடபெருங்
கோயிலுட் கோதையாயை்

சந்தனக் காவனமு மாவனமு மேடையுஞ்
சாடகமு மாடரங்குஞ்
சந்தித்தெ ருத்தலையு மாடகூடங்களுந்
தண்ணிலா முற்றவெளியுஞ்

செந்தமிழ்ப் பாடுவார் தெண்டனிட் டாடுவார்
சீபாடி யம்படிப்பார்
திருவாய் மொழிப்பனுவல் பாராட்டுவார் மிகுந்
திருமல்லி வளநாடியே. (3)

[சுந்தரத்தோளழகர் - திருமாலிருஞ்சோலை எம் பெருமான். ''குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில், எழுகமலப்பூவழகர் எம்மானார்.'' (தையொருதிங்

கட்பாமாலை. 11 - 2). "மகரக்குழைசேர், சுந்தரத் தோளனுக்கோவவன் ஞெண்டர்கட்கோ சுடர்தோய், சந்தனச் சோலைக்குருகைப் பிரான்வந்து சந்தித்ததே." (சடகோபரந்தாதி. 34); மாலிருஞ் சோலை - அழகர் கோவில், திருமால் குன்றம், அழகர் திருமலை, விருஷபகிரி, இருங்குன்றம், திருமாலிருஞ் சோலை மலை, திருவரை, வநகிரி என்று பண்டையோரால் வழங்கப்பெற்று வரும் திருப்பதி. இது மதுரைக்கு வடகிழக்கே பனிரெண்டு மைலில் உள்ளது. எம்பெருமான் அழகர் மாலலங்காரர், சுந்தரபாகு. - சுந்தரவல்லி நாச்சியார் - சோமசுந்தர விமாநம் - சிலம்பாறு - கிழக்கே திருமுக மண்டலம். நின்ற திருக்கோலம் - சந்தந விருக்ஷம் - மலயத்வஜ பாண்டிய னுக்கும் தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் என்ற அறுவரும் அழகரை மங்களாசாஸநம் செய்துள்ளனர். முழுவிவரம் "அழகர் மாலை" (திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கவெளியீடு 5)யிற் காண்க. "தேனேங்கு நீழற்றிரு வேங்கடமென்றும், வானேங்கு சோலைமலை யென்றும் - தானேங்கு, தென் னரங்க மென்றுந் திருவத்தி யூரென்றுஞ், சொன்னவர்க்கு முண்டோதுயர்." (பாரதம் பாடிய பெருந்தேவனார்.) "பணிந்தேன் றிருமாலைப் பாமாலை தாளி, லணிந்தே னருட்டஞ்ச மாகத் - துணிந்தேன், றிருமா லிருஞ்சோலை சேர்ந்தே னெனக்கு, வருமா லிருஞ்சோதி வான்." (நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி). "சிலம்பாறணிந்த சீர்கெழுதிருவிற், சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்." (பரிபாடல்); சோதிமணவாளர் - அழகிய மணவாளர். "ஸ்ரீரங்கத்துக்கு அருகில் உள்ளதும்நிசுலாபுரி யென்னும் மறுபெயரை யுடையதுமான உறையூரை இராசதானியாகக் கொண்டு அதில் வீற்றிருந்து அரசாளுகிற தர்மவர்மாவின் வம்சத்தவனான நந்தசோழன் வெகுகாலம்

பிள்ளையில்லாமலிருந்து ஸ்ரீரங்கநாதனைக் குறித்துத் தவஞ் செய்து, அத்தவத்தின் பயனாய் ஒருநாள் தாமரை யோடையில் ஒரு தாமரைமலரில் ஒரு பெண்குழந்தை யிருக்கக்கண்டு, களித்து, அக்குழந்தையை எடுத்துக் கொண்டுவந்து, 'கமலவல்லி' யென்று திருநாமஞ் சாத்தி வளர்த்து வருகையில், மங்கைப்பருவமடைந்த அந்தப் பெண் தோழியருடன் உத்தியான வனத்தில் மலர்கொய்து விளையாடிவரும்போது, திருமகளின் அம்சமான அப்பெண் மணியை மணம்புரிந்து ஏற்றுக்கொள்ள விரும்பிய ஸ்ரீரங்க நாதன் அதிசுந்தர மூர்த்தியாய், விபவாவதாரமாகக் குதிரைமீது வேட்டையாடிச் செல்லுகிற வியாஜத்தால் அவள் எதிரில் எழுந்தருளிக் காட்சிகொடுக்க, மிக அழகிய அப்பெருமாளைக்கண்டு கமலவல்லி மோகங்கொள்ள அதனை யுணர்ந்த நந்தசோழன் அந்தக் கன்னிகையை ரங்க நாதனுக்கு மிக்க சிறப்போடு மணம்புரிவித்தான்; இங்ஙனம் அழகிய வடிவங்கொண்டு மணம்பெற்றுக் கலியாணக் கோலத்தோடு விளங்கியதனால், ஸ்ரீரங்க நாதனுக்கு "அழகிய மாணவாளன்" என்று ஒரு திருநாமம் ஆயிற்று. (மணம் - விவாகம்; அதனை ஆள்பவன் - பெற்றவன் - மணவாளன்.) முன்னிலும் பின்னழகிய பெருமாள், ஆபரணத்துக்கு அழகுகொடுக்கும் பெருமாள் என்ற திருநாமங்களும் உண்டு." காவிரி - "இவள் பிரமன் மனத்திருந்து கவேரனுக்குப் புத்திரியாய் நதியுருவடைந் தவள். இவள் சையமலை (ஸஹ்ய பர்வதம்) யிற் பிறந்து துகினத்திற்கும் சேதுவிற்குமிடையில் ஒன்பதினாயிரம் யோசனை விரிவாய்ச் சையசம்பவை, கவேரக்கன்னி யெனப் பெயர் பெற்றனள். இவள் அகத்தியரை மணந்தனள். அகத்தியர் வரத்தால் எல்லாத் தீர்த்தங்களும் வணங் கும் வரம் அடைந்து அகண்ட காவிரியெனப் பெயர் பெற்று உலகத்தார் பாவங்களைப் போக்குவள். அகத்தியர் கமண்டலத்திலிருந்த இவளை இந்திரன் வேண்டுகோளால்

விநாயகர் காகவுருக்கொண்டு உருட்ட நதியுருவாய்ப் பிரவகித்தனள். இவளே லோபாமுத்திரை. இதில் அரிச் சந்திரன், அருச்சுநன், சுசீலை, ஒருபன்றி, மண்டூகம், முதலை முதலிய ஸ்நானஞ்செய்து நற்கதிபெற்றனர்.'' (அபிதானசிந்தாமணி.); தூய - பரிசுத்தமான ; கோனேரி - திருவேங்கட மாமலையில் உள்ள ஸ்வாமி புஷ்கரிணி (கோன் ஏரி). இப்பெயர் ஸர்வலோக நிர்வாஹகனுன எம் பெருமானுக்கு மிகவும் பிரியமான தடாகம் எனப்பொருள் படும். அன்றி, எல்லாத் தீர்த்தங்களினும் தலைமைபெற்ற தீர்த்தம் என்றும் பொருளாகலாம். இந்த ஸ்வாமிபுஷ்கரிணி யின் சிறப்பு, வராஹபுராணம் முதலியவற்றில் பரக்கக் காணத்தக்கது. திருமலையில் ஸந்நிதிக்கு அருகிலுள்ள பிரதானமான திவ்யதீர்த்தம் இது. ''ஊனேறு செல்வத் துடற் பிறவி யான்வேண்டேன், ஆனேறேழ் வென்றுனடி மைத் திறமல்லால், கூனேறு சங்கமிடத்தான்றன் வேங்கடத்து, கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே.'' (பெருமாள் திருமொழி. 4-1) ; திருவேங்கடம் - திருமாலினது திவ்விய தேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வட நாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதும், 'கோயில், திருமலை, பெருமாள் கோயில்' என்று சிறப்பாக எடுத்துக் கூறப்பெறுகின்ற மூன்று திவ்ய தேசங்களுள் இடையதுமாகிய தலம் திருவேங்கடம். தன்னை அடைந்த வர்களது பாவம் அனைத்தையும் ஒழிப்பதனுல் 'வேங்கடம்' எனப் பெயர் பெற்றது. (வடசொல். வேம் - பாவம், கடம் - எரித்தல்.) ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ளது நந்தநபுரம் என்னும் ஊர். அதில் புரந்தரன் என்னும் பிராமணேத் தமன் வசித்து வந்தான். அவனது குமாரன் மாதவன் என்பான். அம்மாதவன் மனைவி சந்திரரேகை. இவ்விரு வரும் பூஞ்சோலையிற் சென்று விளையாடிக் கொண்டிருந்த னர். அங்கு மாலிநி என்பா ளொரு சண்டாள கன்னிகை வந்தாள். அவள் கட்டழகைக் கண்டு காமுற்று அவளைக்

கூடினன் மாதவன்; மனையாளைத் துறந்தான்; அப்புலை மங்கையோடு சேர்ந்து புலால் நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள் முழுவதையும் இழந்தான். பின்னர் வழி பறித்தும் உயிர்க்கொலை முதலிய கொடுந்தொழில் புரிந்தும் பொருள் ஈட்டி அவளுக்குத் தந்துவந்து முடிவில் வறியவனுனன் மாதவன். பலவகை நோய்கள் அவனைப் பீடித்தன. அவளால் அகற்றப்பட்டான் அவன். பாவங்கள் பல அவனைத் தொடர்ந்தன. பித்தன் போல அலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்தான். உடனே தனது தீவினையனைத்தும் தீயினிற் தூசுபோலச் சாம்பலாகப் பெற்று முன்னைய பிரமதேஜஸைப் பொருந்தி நல்லறிவு கொண்டு அம்மாதவன் திருவேங்கட மாலைச் சேவித்து வழிபட்டுப் பரமபதம் அடைந்தான்.அதனுல் அம்மாமலைக்கு 'வேங்கடாசலம்' என்னும் பெயர் நிகழ்ந்தது என்று ப்ரஹ்மாண்ட புராணத்திலும் பவிஷ்யோத்தர புராணத்திலும் காணலாம். அன்றி, 'வேம் என்பது - அழிவின்மை, கடம் என்பது - ஐசுவரியம். அழிவில்லாத ஐசுவரியங்களைத் (தன்னையடைந்தார்க்குத்) தருதலால், 'வேங்கடம்' எனப் பெயர் கொண்டது' என்று வராக புராணம் கூறும். இனி, தமிழ் மொழியாகவே கொண்டால், வெவ்விய காடுகளையுடையதெனப் பொருள்படும் என்க; வடபெருங் கோயில் - புராதனமானதும், புராணப் பிரஸித்தமாயுள்ளதும், பெரியாழ்வார் ஸ்ரீ ஆண்டாள் பாடல் பெற்றதுமாகிய ஸ்ரீ வில்லிபுத்தூரில் முக்கியமாயிருப்பதும், மண்டப கோபுரப்ராகாராதிகளாலே அலங்கிருதமாயுமுள்ளதும் ஸ்ரீவடபெருங்கோயில். ஆதியஞ் சோதியாகிய மணிவண்ணப் பெருமாள் அநந்த பரியங்கத்தில் (ஆதிசேஷனுகிய அணையில்) அறிதுயில் (யோகநித்திரை) அமர்ந்தருளும் திவ்யஸந்நிதி; சந்தன காவனம் - சந்தனச் சோலை; மாவனம் - மாந்தோப்பு; சாடகம் - புலவர் கூட்டந்தங்குமிடம்; ஆடரங்கு - ஆடுதற்குரிய நடனசாலை, "அறையு மாடரங்கும் மடப் பிள்ளைகள்,

தரையிற் கீறிடிற், றச்சருங் காய்வரோ'' (இராமாவதாரம். பால காண்டம். தற்சிறப்புப்பாயிரம். 9) ஸ்ரீவில்லிபுத்தூரில் நாடகசாலைத்தெரு என்றே பிரசித்தமான ஒரு தெரு வுள்ளதுகுறிக் கொள்க ; நிலா முற்றம் - உப்பரிகை ; செந் தமிழ்ப்பாடுவார் - ஆழ்வார் அருளிச் செயல்களை ஓதுகின்ற அத்யாபகர் ; சீபாடியம் - ஸ்ரீ பாஷ்யம், ஸ்ரீ பெரும்பூதூர் வந்த வள்ளல் அருளிச் செய்தது. ''ஏராரும் பாஷியத்தை யீன்றபிரான் வாழியே.'', ''பூபார மன்பதைக ளீடேற வருள்பெரும் பூதூர் தழைத்துமலியப் புகழ்தருஞ் சித்தி ரைத் திருவா திரைப்பரம புண்ணிய தினத்தவதரித், தாபாச வறுசமய வேரறுத் தெட்டெழுத் தாதிமுத லென்றுகூரத் தாழ்வான் மதித்தருள வாழ்வான தற்சரண மபிடேகம் வைத் தருளினர், கோபாலர் தொழுபெரிய பெருமா ளரங்கர்தங் கோயிற் றிருப்பதிமுதற் கூறுந் திருப்பதிகள் யாவுந் தழைப் பநங் குழகனழ கியநம்பிமுன், சீபாடியஞ் சுருதி வேதந் தனக்கரு ளிராமாநுசற் றெருழுது மெஞ் சிறியசொற் புன் கவிதை சீபராங் குசமுனிவர் திருவுள முவந்தருளவே.'' (ஆழ்வார் பிள்ளைத்தமிழ். காப்பு.), ''பத்தியுடன் பாடி யத்தைப் பகர்ந்திட்டான் வாழியே.'', சீபாடியம் படிப்பார் - ''அதில் இவனுக்கு இங்கிருந்த நாள் பண்ணலாம் கைங் கர்யம் அஞ்சு உண்டு, அவையாவன :—பாஷ்யத்தை வாசித்துப் ப்ரவர்த்திப்பித்தல், அதுக்கு யோக்யதை யில்லையாகில் அருளிச் செயலைக் கேட்டுப் ப்ரவர்த்திப்பித்தல் அதுக்கு யோக்யதையில்லையாகில் உகந்தருளின திவ்ய தேசங்களுக்கு அமுதுபடி, சாத்துப்படி, திருவிளக்குத் திரு மாலைகளையுண்டாக்குதல், அதுக்கு யோக்யதையில்லை யாகில் த்வயத்தினுடைய அர்த்தாநு ஸந்தாநம் பண்ணுதல் அதுக்கு யோக்யதையில்லையாகில் என்னுடையவ னென்று அபிமானிப்பானொரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமாநத்திலே யொதுங்கி வர்த்தித்தல் செய்யலாம்.'' (ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம். சாஸ்த்ரீய நியமநாதிகாரம்.) ;

பாடியம் - விருத்தியுரை, பேருரை ; பாராட்டுவார் - கொண்டாடுவார், பலகாலுஞ்சொல்லுவார், மெச்சுவார், புகழ்வார்.]

கருமொய்க்கு மெண்மையேன் பிறவிப்பெருங்கடல்
கடத்திடுந் தோணியாகிக்
கலையின்ப வெள்ளப் பெருங்கேணி யாகிநற்
கதிக்கேறு மேணியாகிப்

பெருமக்க ளாகுமிம் மானிடர் தமக்குமுயர்
பெருவாழ் வளிக்கவென்றே
பெய்தமிழ்ச் சுருதியாந் திருப்பாவை முப்பதும்
பெற்றதா யாயாகிஞய்

மருமொய்த்த தண்டலை வருக்கைக் குடக்கனியின்
மாங்கனியி லீன்குலைக்கூன்
வாழைச் செழுங்கனியி லூறுபைந் தேறல்போய்
மதகுபுக் கலையெறியுமத்

திருமுக்கு ளந்தன்னின் மூழ்கிக் கிடந்துலவு
திண்சிறைய வண்குருகினந்
தீதறுத் திடவருநன் னீரிற்றுளைந்து வளர்
திருமல்லி வளநாடியே. (4)

[எண்மையேன் - பரிதாப நிலையையுடைய வெனது ; பிறவிப் பெருங்கடல் - "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேரா தார்"; (திருக்குறள். கடவுள் வாழ்த்து. 10). "இறைவனடி யென்னும் புணையைச் சேர்ந்தார் பிறவியாகிய பெரியகடலை நீந்துவர். அதனைச்

சேராதார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர். காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், பிறவிப் பெருங்கடலென்றார்.'' ''அணைவது அரவணைமேல் பூம்பாவை யாகம், புணர்வது இருவரவர் முதலும்தானே, இணைவனும் எப்பொருட்கும் வீடுமுதலாம், புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே.'' (திருவாய்மொழி 2-8-1); கலையின்ப வெள்ளம் - '' ஈறிலின்பத்திருவெள்ளம்.'' (திருவாய்மொழி 2-6-8); நற்கதி - பராங்கதி ; பெருமக்கள் - பெரியோர் ; பெருவாழ்வு - '' துய்யதமிழிருபத்துநான்கிற் பாட்டின் தொகை நாலாயிரமும் அடியோங்கள் வாழ்வே.'' (தேசிக மாலை. பிரபந்தசாரம் 17); பெய்தமிழ் - சொரிதமிழ், '' கரக்குங் கருத்துடைத் தேசிகர் கன்றென நம்மை யெண்ணிச், சுரக்குஞ் சுரவிகள் போற்சொரி கின்றனர் சொல்லமுதே.'' (தேசிகமாலை. அமிருதாசுவாதினி. 14); மரு - ஓர் பரிமளப்பூடு, வனம், வாசனை ; மொய்த்த - நெருங்கிய ; வருக்கை - பலா ; மதகு - குளத்தின் சல தாரை ; திருமுக்குளம் - ஸ்ரீ வில்லிபுத்தூரில் வடமேற்கே யுள்ளது. மருமொய்த்த * * * திருமுக்குளம் - ஸ்ரீ வில்லி புத்தூரைச்சுற்றி, பெரிய குளம், வாழைக்குளம், வடமலைக் குறிச்சி, சோளங்குளம் முதலிய பல நீர்ப்பாசன ஏரிகள் உள்ளன. இவைகளின் பாசனமாக ஏராளமான நஞ்சை நிலங்கள் உள்ளன. மலையடிவாரத்தில் தென்னை, மாந் தோப்புகள் பல உள. மக்கள் நீராடுவதற்குத் தெற்கே திருப்பாற்கடலும் வடமேற்கே திருமுக்குளமும் இருக் கின்றன ; தீதறுத்திட - தேனிலையாயபிசுக்குப்போக ; வரு நன்னீரில் - ஓடிவரு நல்ல ஜலத்தில் ; வளர் - கண்வளரும்; துளைந்து - அமிழ்ந்து, அநுபவித்து.]

மாலைப் பராவு மெதி ராசனுக் கிளையபெண்
மாண்மிக்க மரகதப்பெண்
வடிவொப் பிலாதபெண் வர்ணிக் கொணுதபெண்
வண்டமிழ் பாடவலபெண்

வேலைப்பெண் மருவரங் கேசர்க்கு மோகப்பெண்
விண்டுசித் தன்பெற்ற பெண்
வில்லிபுத் தூர்க்குமுத் தானபெண் முத்திக்கு
வித்தாம்பெ ணீயன்றியார்

ஆலைக்கரும் பினின் சாற்றைவிட் டாற்றற
லருந்திக் கருங்கமுகெலா
மலைத்துக் குலைத்தெங்கின் முப்புடைக் காய்விழ
வடர்த்துத் தடத்தின் மூழ்கிச்

சேலைப் பழித்தவிழி மாலைக் குழன் மகளிர்
திரண்முலைக் குங்குமமுடன்
செம்மேக மென்னவரு மம்மேதி மிகுபுகழ்த்
திருமல்லி வளநாடியே. (5)

[மால் - ஸ்ரீமந்நாராயணன்; பராவும் - துதிக்கும்; எதிராசன் - ஸ்ரீபாஷ்யகாரர். "தேசமெலா முகந்திடவே பெரும்பூ தூரிற் சித்திரையி லாதிரைநாள் வந்து தோன்றிக், காசினிமேல் வாதியரை வென்ற ரங்கர் கதியாக வாழ்ந்தருளு மெதிரா சா." (தேசிகமாலை. பிரபந்த சாரம் 14), "பெரும் பூதூர் மாமுனிக்குப் பின்னுளை் வாழியே."; மாண்மிக்க - மாட்சிமை மிகுந்த; மரகதப் பெண் - மணிப்பெண்; வர்ணிக்கொணுத - வர்ணித்துச் சொல்லமுடியாத, வாணிக்

கொஞ்தை, வசனிக்கொஞ்தை, பாவிக்கொஞ்தை வென்பன பாடபேதங்கள் ; பாடவல - பாடியருள வல்ல ; வேலை - கடல்; மோகப்பெண் - மாலை மயக்கும்பெண் ; விண்டுசித்தன் பெற்ற பெண் - "விட்டுசித்தன் தூய திருமகளாய் வந்து." (தேசிகமாலை. பிரபந்தசாரம் 10); "பெரியாழ்வார் பெண் பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த." (உபதேச ரத்தின மாலை. 23) ("ஆண்டாள் பெரியாழ்வாருக்குத் திருமகளாய் அவதரித்த. இவள் பிறக்கைக்கு அடியான அவர் பெருமை யிருக்கிறபடி. திருமாலை கட்டுகையே தொழிலாகவிருக்கிற இவர், திருத்துழாயடியிலே அவதரித்த இவளை யெடுத்துக் கொண்டுபோய், தந்தேவிகள் கையிலே காட்டிக்கொடுக்க, வந்த்யையாகையாலே அவரும் அரும்பெறல் பெண்ணை யிருக்கிற இப்பெண்பிள்ளையை அதிப்ரீதையுடனே எடுத்துக்கொள்ள, அப்போது 'வனமுலைகள் சோர்ந்து பாய' என்னும் படியிறே ஸ்தந்யம் ப்ரவஹித்தது. ஈன்றதாய் மார்க்கிறேஸ்வஸ்ரு தாதிகள் ஸந்நிதானத்தில் இரக்கம் பிறந்து இப்படியாவது. ஆகையால் பெண்பிள்ளையாய் அவதரித்த மெய்ப்பாடிருக்கிறபடி.") ஆற்றறல் - ஆற்றுநீர்; அடர்த்து - மோதி, உரசி ; மேதி - எருமை.]

பெண்டிர்கட் கரசான தெய்வங்க ளுயகம்
பேரருட் கோதையென்றே
பிடிக்குந் திருச்சின்ன மூதத் தொழும்பர்தோற்
பிரம்பு கொண்டோச்ச வருபொற்

றண்டிகைப் பவனியும் மஞ்சனச் சேவையுஞ்
சாற்றிட லுனக்கலாது
தாவித்து நாடொறும் பாவித் தியற்றினுந்
தரணியி லெவர்க்குவாய்க்கும்

கொண்டலைத் தழுவுநற் றருமகிரி மீதிற்
குதித்துநெட் டருவிசாய்த்துக்
குடசங் கடுக்கைசந் தனம்புன்னை சண்பகங்
கோங்குடன் பூங்குருந்தைத்

திண்டிரையி னலைறைந் தம்புயத் தடமெலாந்
தேக்கிநவ மணிகள்வீக்கித்
தேம்பொழில் புடைசூழ்ந்த வானநதி பாய்வயற்
திருமல்லி வளநாடியே. (6)

[திருச்சின்னம் - எம்பெருமான் ஸந்நிதிகளில் ஸேவிக்கப்பெறும் வாத்ய விசேஷம். "பரிச்சின்ன மான விருநாலெழுத்தின்பல் வண்மையெலாம், விரிச்சு நலம்பெற வோதவல் லோர்க்கிந்த மேதினிக்கே, மரிச்சின்ன மீளப் பிறவாமல் வாழ்விக்கு மால்வரதர், திருச்சின்ன வோசையினிமையுண் டோமற்றைத் தேவருக்கே." (தேசிகமாலை, திருச்சின்னமாலை, சிறப்புத்தனியன்.) "மங்கல வாத்ய கோஷத்துடனே 'ஆண்டாள் வந்தாள்,' 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி வந்தாள்,' 'சுரும்பார் குழற்கோதை வந்தாள்,' 'திருப்பாவை பாடிய செல்வி வந்தாள்,' 'பட்டர்பிரான் புதல்வி வந்தாள்,' 'வேயர்குல விளக்கு வந்தாள்' என்று பல சின்னங்கள் பணிமாற; தொழும்பர் - கைங்கர்யபரர், அடியார். (தொழும்பு - அடிமை); பவனி - உலாப்போதல்; தாவித்து - ஏற்படுத்தி; பாவித்தியற்றினும் - நடத்தினாலும்; எவர்க்கு வாய்க்கும் - ஒருவருக்குங் கிட்டாது; வாய்க்கும் - கிடைக்கும்; குடசம் - வெப்பாலைமரம்; கடுக்கை - மருதமரம்; புன்னை - புன்னைமரம்; நவமணி - ஒன்பது இரத்தினம், அவை: கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வயிடூரியம்

என்பன ; வீக்கி - மிகும்படி செய்து ; தேம் பொழில் - கற்பகச்சோலை ; வானநதி - ஆகாய கங்கை.]

மாதா வுனக்குச் செழுந்துளவ நீபெற்ற
மைந்தரகி லாண்டமுள்ளோர்
மறையோது பட்டர்கோன் னின்றிருத்தாதை ரா
மாநுச னுனக்குமுன்னோன்

வேதா முதற்கடவு ளெவருமுன் றொண்டருனை
மேவுமண வாளரெழில்சேர்
மெய்த்திரு வரங்கேச ரித்தகையை யாதலால்
வேறினிப் புக(ல்)ழ்வதென்னே

தாதாடு பரிமளப் பூஞ்சுனை குளிப்பவர்
தடங்குழையை நெடுவள்ளையின்
தண்டெனத் தீண்டுவார் கண்களைக் கயலெனத்
தடவுவார் தடமுலையினைச்

சீதாரவிந்த முகை யென்றுகை ப்பற்றுவார்
செழும்வணர்க் குழலையறுகாற்
றிரட்சியென் றேச்சுவார் போன்றிளைஞால
[மயன்மூட்டு
திருமல்லி வளநாடியே. (7)

[மாதா - தாய் ; துளவம் - துளசி ; மைந்தர் - புத்திரர் ; மறை - வேதம் ; பட்டர்கோன் - பட்டர்பிரான். "வேண்டிய, வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்"; தாதை - தந்தை ; இராமாநுஜன் - பெரும்பூதூர் வந்த வள்ளல் ; முன்னோன் - முன்னவன், தமையன் ; வேதா -

பிரமன்; தொண்டர் - வழிபடுகின்ற அடியவர்; மேவு - ஆசைப்படுகின்ற, பொருந்துகின்ற; இத்தகையை - இப் படிப்பட்ட பெருமையை யுடையவள்; என் - என்னை; தாது - பூந்தாது, மகரந்தம். "தாதுகுசோலை" (இராமா வதாரம். பாலகாண்டம். ஆற்றுப்படலம். 20); வள்ளை - ஒருவகைக் கொடி; தீண்டுவார் - தொடுவார்; வணர் - நெறிப்பு, வளைவு; மயல் - ஆசை, மயக்கம்; மூட்டும் - பொருத்தும், ஏவிவிடும், பற்றுப்பண்ணும். இப்பாட்டின் பின்னிரண்டடி "மெய்தொட்டுப்பயிறல்" என்னும் அகப்பொருட் கிளவியின்பாற் படும். இதனைச் சற்று விளக்குவாம். களவியல் பகுப்புகள் இயற் கைப் புணர்ச்சிமுதல் வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் ஈருகப் பதினேழாகும். "இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே, பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்க, லிடந்தலைப் பாடு பாங்கற் கூட்டம், பாங்கிமதி யுடம்பாடு பாங்கியிற் கூட்டம், பாங்கமை பகற்குறி பகற்குறி யிடையீ, டிரவுக் குறியே யிரவுக்குறி யிடையீடு, வரைவு வேட்கை வரைவு, கடாத லொருவழித்தணத்தல் வரைவிடை வைத் துப், பொருள்வயிற் பிரிதலென் றுருபதி னேழுங், களவிற் குரிய கிளவித் தொகையே." (நாற்கவிராசநம்பி யியற்றிய அகப்பொருள் விளக்கம், களவியல். 123) இயற்கைப் புணர்ச்சிப் பொருள்விளக்கும் துறைகள். "இரந்துபின் னிற்றற் கெண்ணலு மிரந்து, பின்னிலை நிற்றலு முன்னிலை யாக்கலு, மெய்தொட்டுப் பயிறலும் பொய்பா ராட்டலு, மிடம்பெற்றுத் தழாஅலும் வழிபாடு மறுத்தலு, மிடையூறு கிளத்தலு நீடுநினைந் திரங்கலு, மறுத்தெதிர் கோடலும் வறிதுநகை தோற்றலு, முறுவற்குறிப் புணர்தலு முயங்குத லுறுத்தலும், புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவு, முணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே." (ஷெ. ஷெ. 127). மெய்தொட்டுப் பயிறலாவது. தலைமகள் மனப்போக்கை அறிந்த தலைமகனுக்குத் தன்வேட்கையை

வெளிப்படுத்தி இனிய மொழிகளினால் தலைவியை இரக்க லாம் என்னும் கருத்துத் தோன்றிற்று. ஆதலின் தலை மகளைப் பார்த்துத் "திருமகள் போன்றவளே! உன்னை விரும்பி நிற்கும் என்னை நோக்காது நிற்பது உனக்கு அருள் ஆகுமா? நீ இங்குத் தனியாய் நிற்றற்குக் காரணம் யாது?" எனவினவினான். நாணத்தினால் தலைவியின் நா அதற்கு மறுமாற்றம் ஒன்றும் பகர்ந்திலது. ஆயினும் வேட்கை மீதூர, நாணம் ஒருபால் ஒதுங்கி நிற்கும் தலைவி யின் நிலைமை தலைவனுக்குப் புலனாயிற்று. அவள் கூந்த லில் மொய்த்திருக்கும் வண்டுகளை ஓட்டுவான்போன்று அவள் தோளைத்தொட்டான். இதுவே இத்துறை. (பயிறல் - நெருங்குதல்.) இதற்குச் செய்யுள் :—" நல்லார்விழி போலி ருந்து மளியெனு நாமம்பெற்று, மல்லார் குழலி லமர்ந் திருந்தா லமரரைவெல்ல, வல்லான் வரோதயன் வாணன் றென்மாறை மதுகரங்கா, ணில்லா திடையுமக்கோ பழிசால நிலைநிற்குமே." (தஞ்சை 8) எனவும், "பிறைநுதலாள் கொங்கைப் பெருக்கத்தாற் றேய்ந்து, குறையு மிடை கண்டுங்கொண்டற்-பொறையுளகத், தண்டேனசையாற் சனநாதன், றெண்டையின்வாய், வண்டே மகிழ்ந்தேறல் வந்து." எனவும் வரும்.]

ஒருபொழுது நின்னடிக டொழுமவரை யளகைநக
ரொண்ணிதிக் கிறைவனாக்கி
யோங்குமயி ராவதத் தேற்றியயி ராணியுட
னும்பருல காளவைத்துப்

பெருகுமகி லாண்டமு மிறைஞ்சுநான் முகனெனப்
பிரமலோகத் திருத்திப்
பெரும்பேறளித் தென்றும் வாழ்விக்கு நின்
பேரருளை யோதவெளிதோ [னுடைய

குருகுறையும் வண்மையுள மாடப் பெருஞ்சுரைக்
குடஞ்சுட்டு முட்டாமைசூழ்
கொள்ளைக் கதிர்ச்சாலி மேய்ந்துகடை வாய்
கொப்புளித் தொழுகுபாலுந் [தொறும்

திருகிவரு நெட்டைக் கருங்கோட்டு மேதிகள்
சிறுகன்றினுக் கிரங்கிச்
செழுமுலை சுரந்தொழுகு பாலும்வயல் பாய்
திருமல்லி வளநாடியே. [செழுந் (8)

[அளகைநகர் - அமராவதிநகரம்; இறைவன் - தலைவன்; ஐராவதம் - இந்திரனது யானை; அயிராணி - இந்திராணி; உம்பர்உலகம் - மேலுலகம், "உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்குநீழல்" (இராமாவதாரம். காப்பு); உம்பர் - தேவர். "உம்பரான் முனிவரால் யோகரால்" (இராமாவதாரம். காப்பு); நான்முகன் - பிரமன்; பிரமலோகம் - ஸத்யலோகம்; குருகு - புரு; வண்மை - வளம்; சுரை - மடி, முலைக்காம்பு; குடஞ்சுட்டு - பசு; சாலி - நெல்; மேதிகள் - எருமைகள்; மேதிகள் சிறுகன்றினுக் கிரங்கிச் செழுமுலைசுரந் தொழுகுபால்—"கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி, நினைத்து முலைவழியே நின்றுபால் சோர." (ஸ்ரீ ஆண்டாள். திருப்பாவை. 12), "காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த, பாலுண்டு துயில." (இராமாவதாரம். பாலகாண்டம். நாட்டுப்படலம். 13), "ஈர நீர்படிந் திந்நிலத் தேசில, கார்களென்ன வருங்கரு மேதிக, ளூரி னின்றகன் றுள்ளிட மென்முலை, தாரை கொள்ளத் தழைப்பன சாலியே." (இராமாவதாரம். பாலகாண்டம். நாட்டுப்படலம். 25); வயல் - கழனி.]

புழுநெளிந் துண்டுவளர் தசைநரம் பென்புதோல்
புண்ணிணக் கும்பிநாற்றப்
புரைப்பாழ்ங் குழிச்சல மலச் சேற்றழுந்திப்
புதைந்துநைந் தேனையெவருந்

தொழுமினிய பங்கயத் தாளா லெடுத்துமெய்ச்
சோதியமு தாலய மலர்த்
துணைவிழியி லானந்த வருண்மாரி பெய்துடல்
தோயக் குளிப்பாட்டிநாய்

தழுவுகுங் குமமுலைக் கெழுதுவார் சிந்துரஞ்
சாத்துவார் பூச்செருகுவார்
தண்டமிழ்ப் பாடுவார் தெண்டனிட் டாடுவார்
சந்தியிற் பந்தடிப்பார்

செழுநில வுகந்திளைஞர் மயலுற முயங்குவார்
தெருவினிற் குரவைபிணைவார்
தேர்த்திரு விழாத்தினம் போற்றினமும் விளையாடு
திருமல்லி வளநாடியே. (9)

[புழு - கிருமி. "காயமெலாம் புழு நெளியக் கவித்த புண்ணும்"; புண் - ஊன்; நிணம் - கொழுப்பு. "நிணங் கருகிச் சுறுநாறுமுடையினும்." (அரிச்ச. மயான. 35.) "எனம்பாலே, கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடி." (இராமாவதாரம். அயோத்தியா காண்டம். குகப்படலம். 21); கும்பி - வயிறு; புரை - உட்டுளை, பழுது; பாழ் - அழிவு ; புதைந்து - மறைந்து ; நைந்தேனை - வருந்தினேனை ; "ஊனிடைச்சுவர் வைத்து என்புதூண் நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல், தானுடைக்குரம்பை"

(பெரிய திருமொழி 1-6-9) "ஸப்ததாதுமயம் த்ரிமலம் சுக்ல சோணித ஸம்பவம்" (கர்ப்போப நிஷத். 1. ரஸம், ரக்தம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்ரம் என்னும் ஏழு வித தாதுக்கள் நிறைந்ததாயும், வாதம், பித்தம், கபம் என்னும் மூன்று மலங்களை உடையதும், சுக்லம் சோணிதம் இவற்றின் சேர்க்கையால் உண்டாவது மான சரீரம்.), "அஸ்தி ஸ்தூணம் ஸ்நாயுபத்தம் மாம்ஸ சோணித லேபநம், சர்மாவநத்தம் துர்கந்தி பாத்ரம் மூத்ரபுரீஷயோ:" (மநுஸ்மிருதி 6.76. எலும்பைத்தூணுகவுடையதும், நரம்புகளால் கட்டப்பட்டதும், மாம்ஸத்தையும் ரத்தத்தையும் கொண்டு பூசி, தோலினைப் போர்த்து, மலமூத்ரங்களுக்கு இருப்பிடமாய் நாற்றமுடைத்தானதுமான சரீரம்.) "மாம்ஸாஸ்ருக் பூயவிண்மூத்ர மேதா மஜ்ஜாஸ்திஸம்ஹதௌ, தேஹேசேத்ப்ரீதிமாந்மூட : நரகேபிஸ : (விஷ்ணு புராணம். 1-17. 63. மாம்ஸம், ரக்தம், ஊந்தண்ணீர், விஷ்டை, மூத்ரம், மேதஸ், மஜ்ஜை, எலும்பு என்ற இவற்றின் சேர்க்கையினுலுண்டான சரீரத்தில் ஒரு முட்டாள் ஆசையை வைப்பானுகில் இதேமாதிரியான நரகத்திலும் அவன் பிரீதியையே செய்வான். அதை வெறுக்கமாட்டான். "பொல்லாவாக்கை" (திருவாய்மொழி 3-23), "புண்ணுராக்கை" (பெரியதிருமொழி 1-9-6) ; மெய்ச்சோதியமுதாலயமலர் - சரீரகாந்தியாகிய சமுத்திரத்திலே தோன்றியிருக்கிற செங்கமலமலர் ; தோய - பொருந்த, ஸ்நானம் செய்ய ; பந்து - எறியும் பந்து, "பந்தணை விறலாள்", "பந்தார் விரலி" (திருப்பாவை, 18), "மெய்வரு போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும், பையர வல்கு லார்த முள்ளமும் பளிங்கும்போல, மையரி நெடுங்க ணுேக்கம் படுதலுங் கருகி வந்து, கைபுகிற் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்." (இராமாவதாரம். பாலகாண்டம். மிதிலைக் காட்சிப் படலம். 16) ; குரவை - "காமமும் வென்றியும்

பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது.'']

உனைமனத் துறநினைத் திடிலென்னை யறியா
துரோமம் பொடிக்கு மின்புற்
றுள்ளங் களிக்கும் விழிவெள்ளந் துளிக்குமென்
புருகுநா வமுதமூறும்

வினைபற் றறுக்குமுடல் புளகிக்கு மாநந்தம்
மெய்ஞ்ஞானம் விளைவுற்றிடும்
மெய்த்தலை வணங்குமுயர் கைத்தலை குவிக்கமிக
விம்மிவாய் வெருவியேத்தும்

சுனைபுக்கு முக்குளித் தெதிர்கொக் கரித்துவரு
சுறவைக் கடிந்துவனசத்
தோட்டைத் திறந்துநற் பேட்டைத் துறந்துநீர்த்
துறையிற் பிறந்துகூனற்

சினைவரிச் சுரிசங்க முழுவயற் பொற்பஞ்சு
சேற்றில்வள ஞற்றிநட்ட
செந்நெல் கருங்கன்ன லென்னக் கிளர்ந்திலகு
திருமல்லி வளநாடியே. (11)

[பொடிக்கும் - புளகிக்கும்; வினைபற்று அறுக்கும்- கன்மங்கள் தொடர்தலை விட்டுவிடும்; உடல் புளகிக்கும் - உடம்பு பூரிக்கும்; மெய்ஞ் ஞானம் - உண்மை ஞானம்; விளைவு - ஆக்கம்; சம்பவிப்பு; கைத்தலை - கைத்தலம்; விம்மி - பொருமி, அழுது; வெருவி - அஞ்சி; முக்குளித்து -

அமிழ்ந்தி ; கொக்கரித்து - கர்ஜ்ஜித்து ; சினைவரிச்சுரி - உறுப்பாகச் சொல்லுமிரேகையின் சுழற்சி ; வளன்ஆற்றி - பண்படுத்தி ; கிளர்ந்து - வளர்ந்து. " கண்ணன், எம் மானைச் சொல்லிப் பாடி எழுந்தும் பறந்தும் துள்ளாதார் " (திருவாய் மொழி 3 -5-1), " திருமாலை, பண்கள் தலைக் கொள்ளப் பாடிப் பறந்தும் குனித்துழலாதார்." (திரு. 3-5-2), " பிரானைச் சொல்லிச் சொல்லி நின்று எப்போதும், தலையினோடாதனம் தட்டத் தடுகுட்டமாய்ப் பறவாதார் " (திரு 3-5-3), " சிரீதரன் தொல்புகழ் பாடி கும்பிடு நட்ட மிட்டாடிக் கோகு கட்டுண்டுழலாதார் " (திரு 3-5-4), " ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த, வேத முதல்வனைப் பாடி வீதிகள் தோறுந்துள்ளாதார் " (திரு 3-5-5), " பரஞ்சுடரை நினைந்தாடி, நீர்மல்கு கண்ணினராகி நெஞ்சம் குழைந்து நையாதே." (திரு 3-5-7), " வார்புனலந்தணருவி வடதிருவேங்கடத் தெந்தை, பேர்பல சொல்லிப் பிதற்றிப் பித்தரென்றே பிறர் கூற, ஊர் பலபுக்கும் புகாதும் உலோகர் சிரிக்க நின்றாடி, ஆர்வம் பெருகிக்குனிப்பார் " (திரு 3-5-8), " அமர நினைந்தெழுந்தாடி அலற்றுவதே கருமமே " (திரு 3-5-9), " தேவ பிரானை, ஒருமை மனத்தினுள் வைத்து உள்ளம் குழைந் தெழுந்தாடி, பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுமின் பேதமை தீர்ந்தே." (திரு 3-5-10), " ஆடியாடி அகம் கரைந்து இசை, பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி " (திரு 2-4-1), " உள்ளம், மலங்க வெவ்வுயிர்க்கும் கண்ணீர் மிகக், கலங்கிக் கைதொழும் நின்று இவளே." (திரு 2-4-4), " இவள் இராப் பகல் வாய் வெரீஇ தன, குவளையொண் கண்ணநீர் கொண்டாள் " (திரு 2-4-5), ' உள்ளம், உக உருகிநின்று உள்ளுளே '. (திரு 2-4-6).]

தகரக் குழல்புற மவிழ்ந்திட மருங்கிலிடை
சற்றே நெகிழ்ந்திட முலைத்
தரளப் படாஞ்சரிய நடையிட் டுலாவியெதிர்
சருவிக் குறும்பு மொழியான்

மகரக் குழைப்பணி யசைப்பிப் பசப்பிவிழி
வஞ்சவலை வீசிவேசை
மாமால மிட்டுவரு மாபாச மட்டையர்
மயக்கினை விலக்கியருள்வாய்

நிகரற்ற மாமணிப் படிகமா டத்திலகு
நித்திலச் சித்திரத்தூண்
நிலவிடும் பவளத் துகிற்பதா கைத்திர
ணிமிர்ந்திட நடிப்பதிமையோர்

சிகரப் பொருப்பொரு விந்நகரச் சிறப்பொரு
செகத்துமி லெனக்கோதைமார்
திதிக்கப் புகழ்ந்துவகு கைவார நிகர்செய்ய
திருமல்லி வளநாடியே. (11)

[தகரம் - மயிர்ச்சாந்து; மருங்கு - இடை; தளரப் படாம் - முத்துக் குஞ்சரங்களை முன்தலைப்பிலுடைய சேலை; நடை - செல்லுகை; குறும்பு - பரிகாசம்; மொழியால் - சொல்லால்; மகரக்குழை - மகரகுண்டலம்; பணி - ஆபரணம்; பசப்பி - ஏய்த்து; வேசை - வேசி, விலைமகள்; மாமாலம் - பாசாங்கு; மட்டையர் - முட்டாள்கள்; படிகம்- பளிங்கு; நித்திலம் - முத்து; சித்திரத்தூண் - அலங்காரத் தம்பம்; துகில் - சீலை; பதாகை - பெருங்கொடி, 'பதாகை யென்பது - பகருங்காலை பெருவிரல் குஞ்சித்தல்லா

நான்கும் மருவி நிமிரு மரபினதென்ப' ; சிகரப் பொருப்பு-மேரு ; ஒருவு - விலக்கிய ; நகரம் - மாளிகை, இராசதானி, ஊர், கோயில் ; வகு - வகுத்துக் காட்டும் ; கைவாரநிகர் - தோரணையோடு கையை உயரவெடுத் தசைக்கும் ஓரபிநயம்.]

சந்தாப மிகுதுயர்ப் பவமாயதளை தனைத்
தறித்துய்ய வலம்வந்துனைச்
சரணென்ற டைந்தவர்க் கரணென்ன வும்மிரு
சண்டாள மிண்டரெனினும்

வந்தாலு வந்தவரை யாதரித் தேயருள்செய்
வதுநின்றன் விருதென்னவும்
மணிநூபு ரந்திகழு முன்றிருத் தாளெனது
வஞ்சமிகு நெஞ்சில்வைப்பாய்

கொந்தார் மலர்ப்பொழிலு மந்தாரை வேலியுங்
குன்றம்வரு தென்றல்வீசுங்
கோட்டுத் தடஞ்சுனையும் மேட்டுப் படர்ந்துவளர்
குல்லையிதழ் முல்லைவனமும்

செந்தாமரைக் கழனியுந் துழனி யுந்தியுந்
திரைப்புன னிரைப்பணிலமுஞ்
செங்குவளை யங்குளமு மெங்கும் வளை யும்புகழ்த்
திருமல்லி வளநாடியே. (12)

[சந்தாபம் - வெப்பம், கொடுமை ; பவம் - பிறப்பு, பாவம் ; ஆய - ஆகிய ; தளை - விலங்கு ; தறித்து - வெட்டி; உய்ய - உஜ்ஜீவிக்க ; அலமந்து - ஏங்கித்திரிந்து ; வலம் வந்து என்றும் பாடம், பிரதக்ஷிணம் செய்து ; இருசண் டாளர் - ஜாதி சண்டாளரும், கரும சண்டாளரும் ;

மிண்டர் - திண்ணியர், மதத்தால் அடர்ப்பவர்; விருது - அடையாளம், கொடி; நூபுரம் - காற்சிலம்பு; அரண் - கோட்டை; மந்தாரம் - முண்முருங்கு; மந்தாரை - ஒரு பூச்செடி, அது, காட்டு மந்தாரை, அந்தி மந்தாரை, கொக்கு மந்தாரை, சிவப்பு மந்தாரை, வெள்ளை மந்தாரை யெனப்பலதிறப்படும்; வேலி - வயல், காவல், சூழ்தல்; முல்லை - வனமல்லிகை; துழனி - ஒலி, "நீரிலெருமை பாய் துழனி" (இராமாவதாரம். பாலகாண்டம். நாட்டுப் படலம். 3); பணிலம் - சங்கு.]

காற்றைப் பிடித்ததோர் பீற்றற் றுருத்தியைக்
கலிவிடுதி வீட்டுமோட்டுக்
காக்கை கழுகீர்த்துண்ணு மாக்கையைத் தேக்கு
காம நோய் தீமைநந்துஞ் [பொய்

சோற்றுச் சுவர்க்குருதி யூற்றுச்சடத்தை வெந்
துன்பம் புகும்பொந்தினைத்
துர்க்கந்த முற்றமல பாண்டத்தை யென்னுற்
சுமக்கமுடி யாதுகண்டாய்

ஆற்றைக் கடந்தகய லேற்றைப் பிளந்ததிரு
மலையுட்பு குந்து வலையோ
டாளைத்து றந்துவிரி பாளைக் கருங்கமு
கலைத்துக்குலைச் செந்நெலைச்

சேற்றிற் குமை(ழை)த்துவய ளுற்றைப் பறிக்குமவர்
செம்முகத் துலவு கெண்டைத்
திண்திடிறற் கஞ்சியுயர் கொண்டல்புக் குய்ந் [திடுந்
திருமல்லி வளநாடியே. (13)

[பீற்றல் - கிழிந்த ; துருத்தி - சடம். "பீற்றற் றுருத்தியை" (பட்டினத்தடி.); விடுதி - தங்குமிடம் ; கலிவிடுதி வீடு - கேடுகளாறியிருக்குமிடம் ; வீடு - மனை ; மோடு - மூடத்தனம் ; தேக்கு - நிறைக்கும் ; பொய் - அசத்தியம், இல்லது கூறல் ; தீமை - கேடு, கொடுமை ; நந்தும் - விரித்தியாகும், மிகும் ; குருதி - இரத்தம் ; ஊற்று - பெருகி வருவது ; புகும் - நுழையும் ; பொந்து - குகை (மரப் பொந்து.); துர்க்கந்தம் - கெட்ட நாற்றம் ; மலபாண்டம் - உடம்பு ; ஏற்றை - நீர்த்துறையிலுள்ள பரண் ; பாளை - கமுகு ; தெங்கு, பனை முதலியவற்றில் வரும் பாளை. "பைம் பொழிற்கமுகின், மடலிடைக் கீறி வண்பாளைகள் நாற" (திருப்பள்ளி யெழுச்சி. 3); அதிரும் அலை - ஒலிக்கும் கடல் ; குமைத்து - குழைத்து - ஒன்றுக்கி.]

பதறிக் கொடுங்கொலைக் காலக் கடுந்தூதர்
பற்றியெற் றெனவந்துநீள்
பாசப் பருங்கயிறு வீசிப் பிடித்துடல்
பதைத்திட வதைக்கு மந்நாள்

கதறித் துதிக்கவென் ருெ வெழும்பா துனது
காருழக் கையெழாது
கதியிலாப் பாவியே ஞவியினை யின்றுனது
கருணைக் கிலக்காக்கினேன்

உதறிச் சிறைப்படலம் விசிறிக் குடைந்துநற
வுண்டுவண் டூதுவாச
முயற்பொற் பொகுட்டுநெட் டரவிந்த மொட்ட
மோடையின் பாற்றிடரின் மேற் [விழு

சிதறிக் கிடந்தபுனை நனையினை யனப்பேடு
சினையென் றணைப்பவதன்வெண்
செழுஞ் சினையினைக் குருகுமீனென நினைத்து [ணுந்
திருமல்லி வளநாடியே. (14)

[பதறி - திடுக்கிட்டு; பாசம் - நமனாயுதம், "சூலம் பிடித்தெம பாசஞ்சுழற்றித் தொடர்ந்து வருங் காலன் றனக்கு" (கந்தரலங்); வீசி - யெறிந்து; புனைநனை - புன்னை யரும்பி; சினை - முட்டை; குருகு - ஓர் நீர்ப்பறவை; முத்துப்போன்ற சினையினைக் குருகு தனது உணவுப் பொரு ளென மயங்கியருந்துதலுண்டென்பது 'இக்குக்கணுத் தெறித்திட்ட முத்தைக் கொக்குமொக்கிக் கக்குவிக்கும்' என்பது முதலிய கவிகளிற் காணப்பெறுகிறது. "எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே!" (பெரி யாழ்வார் திருமொழி 4-10-1), "சாமிடத்து என்னைக் குறிக்கொள் கண்டாய் சங்கொடு சக்கரமேந்தினனே!, நாமடித்து என்னை அநேக தண்டம் செய்வதா நிற்பர் நமன் தமர்கள், போமிடத்து உன்திறத்து எத்தனையும் புகா வண்ணம் நிற்பதோர் மாயைவல்லை, ஆமிடத்தே உன்னைச் சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே." (பெரி. 4-10-2), "அஞ்ச நமன்தமர் பற்றலுற்ற அற்றைக்கு, நீ என்னைக் காக்கவேண்டும்" (ஷை 4-10-4), "தண்ணென வல்லை நமன்தமர்கள் சாலக் கொடுமைகள் செய்யா நிற்பர். * * * அண்ணலே நீ என்னைக் காக்க வேண்டும்" (ஷை 4-10-6), "வஞ்ச வுருவின் நமன்தமர்கள் வலிந்து நலிந்து என்னைப் பற்றும்போது அஞ்சலமென்று என்னைக் காக்கவேண்டும்" (ஷை 4-10-7), "நமன்தமர் பற்றி நலிந்

திட்டு இந்த, ஊனே புகேயென்று மோதும்போது அங்கேதும் நான் உன்னை நினைக்கமாட்டேன். * * * நீ என்னைக் காக்கவேண்டும்'' (ஷை 4-10-8.), "நமன்தமர் செய்யும், வேதனைக்கு ஒடுங்கினேன். * * * நாதனே! வந்துன் திருவடியடைந்தேன்.'' (பெரிய திருமொழி 1-6-3), "கடுஞ் சொலார் கடியார் காலனார் தமரால் படுவதோர் கொடுமிறைக்கு அஞ்சி, நடுங்கி நான் வந்துன் திருவடியடைந்தேன்.'' (ஷை 1-6-5), "ஊனிடைச் சுவர்வைத்து என்புதூண் நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல், தானுடைக்குரம்பை பிரியும்போது உன்தன் சரணமே சரணமென்றிருந்தேன், தேனுடைக்கமலத் திருவினுக்கரசே! திரை கொள் மாநெடுங்கடல் கிடந்தாய்!, நானுடைத் தவத்தால் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்'' (பெரியதிரு 1-6-9), "மஞ்சு லாவு சோலை சூழ யிந்தை மன்னு மன்னுசீர் வரையெ டுத்து நிரைய ளித்த மாசில் வாசு தேவனே!, செஞ்சொ லன்பர் சிந்தை கொண்டு தீதி லாத தூதனாய்த் தேரு மூர்ந்து தேசு யர்ந்த செல்வ தெய்வ நாயக, வெஞ்சொ லாளர் கால தூதர் வீசு பாசம் வந்தென்மேல், விழுந்த முந்தி யான யர்ந்து வீழ்வ தற்கு முன்னநீ, யஞ்ச லஞ்ச லஞ்ச லென்ற ளிக்க வேண்டு மச்சுதா வடிய வர்க்கு மருளி யக்கு மடிய வர்க்கு மெய்யனே.'' (தேசிகமாலை. நவமணிமாலை. 8).]

உன்னைப் புகழ்ந்தியான் வேண்டுவர மொன்றுண்டிவ்
வுலகெனொரு குடைநிழலிடை
யுற்றெளிர வாள்கெனப் பொற்றவி சிருத்தினு
முறக்கந் துறக்கும்வானோர்

மன்னற்கு மன்னெனப் பாவிக்க வைக்கினுமவ்
வாழ்வையொரு பொழுதும்வேண்டேன்
வண்புதுவை யின்னினடி தொழுமவர் புறங்கடை
வைகுநாயென வகுப்பாய்

புன்னைப் பொதும்பரிற் பள்ளிகொண் டள்ளலம்
பூஞ்சுனையி லூஞ்சலாடிப்
புளினத்து வெளினத்தோ டுறவாடி வயலிற்
புகுந்துவிளை யாடிமேட்டிற்

செந்நெற் செழுஞ்சூட்டின் மென்னடைப் பேட்டு
செங்கா லனம்பிணைதனிள் [டன்
செம்பொற் பருப்பதத்தம் புலியினிணை பொருந்
திருமல்லி வளநாடியே. (15)

[தவிசு - ஆசனம்; வானோர் - வானவர், தேவர்; வானோர் மன்னன் - இந்திரன்; பாவிக்க - கருத; பாலிக்க வென்று பாடமாயின் வானோர் என்பது ஆருவது வேற்றுமைத் தொகை. இரட்சிக்க, வைக்கினும் - சுவர்க்கத்திலிருக்கச் செய்தாலும்; புறங்கடை - தலைவாயில் "புறங்கடையதாகும் பொருள்" (நீதிநெறிவிளக்கம் 64); பொதும்பர் - சோலை "மாடுறு பொதும்பர்போய் மலர் கொய்து" (கந்தபு. மார்க்கண். 80); அள்ளல் - சேறு; புளினம் - மணற்குன்று, மணற்றிட்டை "இரதத்திரள் புளி நம்" (இராமா. கர. 94); வெள் இனத்தோடு - வெண் நிறமான தன் குலப் பறவைகளோடு. வெளில் நத்தோடு - வெண்ணிறமான சங்கங்களோடு; உறவாடி - உறவு கொண்டாடி; சூடு - நெற்போர்; பிணைதல் - கூடியிருத்தல், கலத்தல், "இரு பறவையும் பிணைந்து கொண்டிருந்தன;" அம்புலியின் இணை - இரண்டு சந்திரன்; பருப்பதம் - மலை.]

கண்படைத் ததுநினைக் காணவுஞ் சென்னியுன்
கழலிணை வணக்கமுறவுங்
கையுனைப் போற்றவுந் நாவுனைப் பாடவுங்
காலுனை வலஞ்செய்யவும்

பண்புறச் செவியுனது வண்புகழ் கேட்கவும்
பாவிக்கு மிம்மனிதனைப்
பாரிற் பிறப்பதற் காசையல்லா லுனது
பரமபதவாழ்வும் வேண்டேன்

தண்பொழிலில் வண்பூக மொண்பாளை முத்தவெண்
சாமரை யிரட்டநாற்று
தாற்றுப் பெருங்கதலி கீற்றிலைப் பச்சைத்
தடுக்கால வட்டமோச்சச்

செண்பகப் பந்தரிவர் மரகதத் தருமன்முன்
செம்பவள வல்லிதுவள்கா
தெய்வரம் பையராடு மிந்திர புரம்பொருவு
திருமல்லி வளநாடியே. (16)

[பாவிக்கும் - கருதும். "வாயவனை யல்லது வாழ்த் தாது கைஉலகம், தாயவனை யல்லது தாம்தொழா—பேய் முலைநஞ் சூணாக வுண்டான் உருவொடு பேரல்லால், காணா கண் கேளா செவி." (பொய்கையாழ்வார். இயற்பா. முதல் திருவந்தாதி. 11). "காண்காணென விரும்பும் கண்கள் கதிரிலகு, பூண்தா ரகலத்தான் பொன்மேனி—பாண்கண், தொழில்பாடி வண்டறையுந் தொங்கலான் செம்பொன், கழல்பாடி யாம்தொழுதும் கை." (பேயாழ்வார். இயற்பா மூன்றுந்திருவந்தாதி. 35). "வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி மகுடம், தாழ்த்தி வணங்குமின்கள் தண்மல

ரால்—சூழ்த்த, துழாய் மன்னு நீள்முடியென் தொல்லை மால் தன்னை, வாழாவண்கை கூப்பி மதித்து.'' (திருமழிசைப்பிரான். இயற்பா. நான்முகன்திருவந்தாதி. 11). பரமபதவாழ்வு வேண்டேன்—''பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச் செங்கண், அச்சுதா! அமரரேறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும், இச்சுவை தவிரயான் போய் இந்திர லோகம் ஆளும், அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!'' (திருமாலை 2.) ''கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ, யுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை, அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக், கண்ட கண்கள் மற்றொன் றினைக் காணாவே.'' (அமலனாதிபிரான். 10). ''ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச்ச நியதாவீர பாவோ நாந்யத்ர கச்சதி.'' (உத்தர ஸ்ரீராமாயணம். 40-14). (அகில லோகங்கட்கும் அரசரான சக்ரவர்த்தித்திரு மகனாரே! தேவரீர் விஷயத்தில் அடியேனுக்கு அதிகமான நட்பு எப்பொழுதும் பூர்ணமாயிருக்கிறது; சூரரே! பரமபக்தியும் எப்பொழுதும் இருக்கின்றது; மநோவ்ருத்தி விசேஷ மானது வேறொருவரிடத்திலும் போகிறதில்லை.) ''நிரந்தரம் நிர்விசத ஸ்த்வதீய மஸ்ப்ரிஷ்ட சிந்தாபத மாபிரூப்யம், ஸத்யம் சபே வாரண சைலநாத வை குண்ட வாஸேபி நமே பிலாஷ:'' (ஸ்ரீவரதராஜபஞ்சாசத். 49) (''நின்னதாய் நாக நாத நேடுசிந் தையினை மீறி, மன்னுநின் னழகு வாய்ந்த வடிவினை மகிழ நோக்கி, யென்றுமே யனுப விக்கு மெனக்குவை குண்ட வாஸந், தன்னிலு மாசை யில்லை சத்திய வானை யீதே.'' ''ஏ! அத்திகிரி நாதனே! சிந்தைக்கு மெட்டாத நின்திருமேனி யினழகை என்றும் கண்களாற் கண்டுகளிக்கும் அடியேற்கு வைகுண்ட வாஸத்திலும் ஆசையில்லை யென்று சத்தியமாக சபதம் பண்ணுகிறேன்.''), ''உறுவதுனக்குரைக் கேனிங் கிருக்குங்காலமொரு பிழையும் புகுதாத புணர்த்தி

வேண்டிப், பெறுவதெலா மிங்கே நாம் பெற்று வாழப் பேரடிமையாலே தென்றிகழேனீயே." (தேசிகமாலை. அமிருத ரஞ்சனி 19); பாளை முத்த வெண்சாமரை - பாளை யாகிய முத்தம் போன்ற வெண்ணிறமான சாமரம்; நாற்றுதாற்றுப் பெருங்கதலி - தூங்குகின்ற, தொங்குகின்ற குலையினுடைய மொந்தன் வாழையினது; கீற்றிலைப் பச்சைத்தடுக்கு ஆலவட்டம் - வரைகளையுடைய இலை யாகிய பசுமை நிறமான சிறு பாய்போன்ற விசிறி; மரகதத்தருமன் முன் - மரகதமணியின் னிறம் போன்ற நிறத்தையுடைய தமால விருட்சமாகிய இந்திரன் முன்பு; செம்பவளவல்லி துவள்கா - செவ்விய பவளம்போன்ற செந் நிறமான கொடிகள் அசைந்து கொண்டிருக்கிற பூந் தோட்டம், சோலையுமாம்; பந்தர் - பந்தல்; துவள்கா - அசைந்து கொண்டிருக்கிற; பொருவு - ஒத்த.]

## பலச் சுருதி.

அருடிரு வரங்கவென் றேத்துமடி யார்களுக்
காளாக்கி மீளவுந்தண்
ணளிசுரந் தெனையடிமை கொண்டென்ற னிதய
லாசனத் திருந்திசையுறுஞ் [கம
சுருதிவண் டமிழ்பாடவல்ல பொற்கோதை சொல்
தொல்புகழினைக் கேட்டியான்
தோத்திரஞ் செய்யுமிச் சந்திர கலாமாலை
சுருதியிசையப் படிப்போர்

கருதிய பயன்பெறுவர் மருவியவளம் பெறுவர்
கல்விசெல் வம்பெறுவர்நற்
காமதேகம் பெறுவர் சோமலோகம் பெறுவர்
கமலாகரத் தவனுறும்

பருதிமண் டலம்பெறுவர் பெருமைபெறு மிந்திரன்
பத்தனம்பெறுவ ரளகைப்
பதிபெறுவ ராரணன் கதிபெறுவர் நாரணன்
பரமபதமும் பெறுவரே. (1)

[அடியார் - பரன்திருவடிக் கடவாதே வழிபடுவார். அடிக்கடப்பார் அடியார் ஆகார். அடிக்கடவா வழி யொன்றிய அடியோர்க்கன்றி ஏனையோர்க்குப் பரன் அருள் புரியான். "ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்ப துன்னடியார்க், கென்செய்வ னென்றே யிருத்திநீ - நின் புகழில், வைகுந்தஞ் சிந்தையிலு மற்றினிதோ? நீயவர்க்கு, வைகுந்த மென்றருளும் வான்." (இயற்பா. பெரிய திருவந்தாதி 53). "ஆடிப்பாடி அரங்கவோ வென்றழைக் கும் தொண்டரடிப்பொடி, ஆடநாம்பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னுவதே?" (பெருமாள் திரு மொழி 2-2). "ஆறுபோல் வரும் கண்ணநீர் கொண் டரங்கன் கோயிற்றிருமுற்றம், சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ் சேறென் சென்னிக் கணிவனே." (பெரு மாள் திருமொழி 2-3.) "நாத்தழும்பெழ நாரணா வென்ற ழைத்து மெய்தழும் பத்தொழு, தேத்தியின்புறு தொண்டர் சேவடியேத்தி வாழ்த்துமெ னெஞ்சமே." (ஷை 2-4). "அத் தனச்சனரங்கனுக் கடியார்களாகி அவனுக்கே, பித்தராமவர் பித்தரல்லர்கள் மற்றையார் முற்றும் பித்தரே." (ஷை 2-9) "நாதனை நர சிங்கனை நவின் றேத்து வார்களுழக்கிய, பாததூளி படுதலாலிவ் வுலகம் பாக்கியஞ் செய்ததே." (பெரியாழ்வார் திருமொழி 4-4-6.); அடியார்களுக்கு ஆளாக்கி - "அடியார்க்கு என்னை ஆட்படுத்த - என்கிற இடத்தில் 'அடியார்' என்கிற இத்தாலே த்ரிதீயாக்ஷரத்திலே சொன்ன ஜீவவர்க்கமும், ஜீவர்களுக்கு ஈச்வரனைக் காட்டில் வேறுபாடும், அந்யோந்யம் பிரிவும் காட்டப்படு

கிறது. 'அடியார்' என்றால் ஸர்வ ஸாதாரணமாக சதுர்த்தியில் சொன்ன தாதர்த்யவான்களை யெல்லாம் காட்டிற்றே யாகிலும், இங்கு 'அடியார்' என்கிறது 'யோ ஹ்யேநம் புருஷம் வேத தேவோ அபி நதம் விது :' என்னும்படி அபரிச்சேத்ய மாஹாத்ம்யரான சேஷத்வஜ் ஞாநரஸிகரை. இப்படி 'அடியார்க்கு' என்று விசேஷோபதாநம் பண்ணுகை யாலே மத்யமாக்ஷரத்தின் படியே நிருபாதிக சேஷிகள் வேறு இல்லாதபடியும் கர்மோபாதிக சேஷிகளோடு தமக்குத் துவக்கற்ற படியும் சொல்லிற்றாயிற்று. ஸர்வசேஷியாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்கப்ராப்தனாய், நிரங்குச ஸ்வதந்த்ரனாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்க சக்தனுமான ஸர்வேச்வரன் அநந்யப்ர யோஜநரான ஆச்ரிதர்க்கு ஸர்வமும் சேஷமாகக்கடவது என்கிற விசேஷத்தாலே ஸர்வருக்கும் பாகவதசேஷத்வம் நித்யஸித்தமானால் அநந்ய ப்ரயோஜநரான ஆச்ரிதர்க்கு பாகவதசேஷத்வம் ஈச்வரன் தன்னையும் பாகவதரையு மொழிந்த அந்யரைப்பற்ற சேஷத்வ மில்லாதபடி வருகிறதாய், இதின் பலமான கைங்கர்யமும் இப்படி வருகிறதாகையாலே 'என்னை அடியார்க்கே ஆட்படுத்தினான்' என்கிற அவதாரணம் இங்கு விவக்ஷிதம். "மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பாரோடுற்றிலன்" என்றிறே இவர்களுடைய பாசுரம். என்னை ஆட்படுத்த — "யூயமிந்த்ரிய கிங்கரா :" என்னும்படி இந்த்ரியகிங்கரனாய் வைத்து அதற்கு மேலே "ஈச்வரோஹம்" என்று இருக்கக்கடவ என்னை "அதோzஹமபி தே தாஸ :" என்னப் பண்ணின உபகாரத்திற் காட்டிலும் "உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்னப்பண்ணின இதற்கு மேலொரு உபகாரமுண்டோ என்று இப்பரமோபகாரத்தையும் பிரியப் பேசுகிறார். இது நமஸ்ஸின் தாத்பர்யார்த்தம்." (ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த முநிவாஹநபோகம்.); மீளவும் - திரும்பவும் ; இதய

கமலாசனம் - உள்ளத்தாமரைத் தவிசு ; தொல் - பழமையான "தொல்பகீரதி மைந்தனும்" (பாரத. கிருட்டிண. 74) ; தொல் புகழினை - பழையகீர்த்தி. "இராமன், பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் ... நுவே." (இராமாவதாரம். அயோத்தியா காண்டம். மந்தரை சூழ்ச்சிப் படலம். 78); சுருதிவண்டமிழ்-வேதவளத்தமிழ் ; சுருதி-ஸ்வரம் ; சுருதி இசைய - இசைஅமையும் படி ; கருதிய பயன்பெறுவர் - "நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம், வீடியல் வழிய தாக்கும் வேதியங் கமலை நோக்கு." (இராமாவதார நூற்பயன்) ; மருவியவளம் - பொருந்திய தேகபலத்தை, ஞானவலிமையுமாம் ; தேகம் - சரீரம் ; (தேக :- தகிக்கப்படுவதென்பது) ; சோம லோகம் - சந்திர லோகம் ; கமலாகரத்தவன் - தாமரைத் தடாகத்துக்குத் தலைவனை சூரியன் ; பரிதி - சூரியன். "பரிதி நன் மரபில் வரு பார்த்திபன்" (அரிச்ச. காப்பு. 2). "பரிதிவானவன்" (இராமா. பால. தாடகைவதைப். 5) ; பரிதி மண்டலம் - சூரியமண்டலம் ; பத்தநம் - பட்டணம், "பசிநோய் முதலாம் - புத்திக்கிலே சங்கணீங்கிப் புக்கார்க் கென்றும் போதலில்லாச் - சித்திப் பெயர்ப்பத்த நம்புகுவார்கட்குச் செவ் வழியே." (திருநூற். 40) ; பரமபதம் - மோட்சம்; பெறுவர்- அடைவர், கிட்டுவர்.]

## வாழித்திருநாமம்.

பொங்கமிகு மாநிலத் தரசர்செங் கோல் வாழி
பொதுமறை சுருதி வாழி
புங்கவர்க ளாம்பரம பாகவதர்வாழி யவர்
பொறை வாழி கருணை வாழி

எங்களெதி ராசமுனி தந்த பாடியம் வாழி
யினியபல் லாண்டுமுதலா
யிசைந்த நாலாயிரப் பனுவல் செந்தமிழினி
லிசைத்தருள் பதின்மர்வாழி

துங்கநெடு மாலென்னும் யாவர்க்கு முதல்வாழி
சுரிகுழற் கோதையென்னுஞ்
சூடிக்கொடுத்த மயில் வாழியவ டோன்றி யருள்
துளப மாளிகையும் வாழி

திங்கள்மும் மாரிபெய் தளவிலாச் செல்வமிகு
ஸ்ரீவில்லி நகரம் வாழி
செய்யவித் திருமல்லி வளநாடு வாழிசீர்
திகழுமிந் நூல்வாழியே. (1)

[பொங்கம் - பொலிவு ; பொதுமறை - தமிழ்வேதம் ; சுருதி - வடமொழி வேதம் ; புங்கவர் - உயர்ந்தோர் ; பாகவதர் - விட்டுணு சமயத்தவர் ; பொறை - பொறுமை, க்ஷமை ; கருணை - தயை; நாலாயிரப்பனுவல் - நாலாயிரத் திவ்யப்ரபந்தம் ; இசைத்தருள் - அருளிச் செய்த ; துங்கநெடுமால் - பெருமையுள்ள திருமால் ; முதல் - காரணவஸ்து ; திங்கள் மும்மாரி பெய்து - "திங்கள் மும்மாரி பெய்து" - (திருப்பாவை. 3), "வெள்ளக்கேடும் வறட்கேடும் இன்றிக்கே ஊறெண்ணெய் விட்டாற்போலே யிருக்கை. ஒன்பதுநாள் வெயிலும் ஒருநாள் மழையுமாய். "நிகாமே நிகாமேந: பர்ஜந்யோ வர்ஷதி" (யஜுர்வேதம். பிரார்த்திக்கிறபோ தெல்லாம் மேகமானது நமக்கு மழை பெய்யா நின்றது.)"; திகழும் - விளங்குகின்ற.]

---

| இலக்கம். | வெளியீட்டின் பெயர். | வள்ளலார் பெயர். |
|---|---|---|
| 13. | திருவருண் மாலை. | ஸ்ரீமான் ஆர். கேசவய்யங்கார் அவர்கள். |
| 14. | தூப்புல் வள்ளல் பழமொழிச் சிறப்பு. | ப. ரெ. திருமலை அய்யங்கார். |
| 15. | அடைவு அமைக்கும் அற்புதன். | ப. ரெ. திருமலை அய்யங்கார். |
| 16. | தமிழர் தோழ வேதாந்த வாசிரியன். | ஸ்ரீமான் டி. எஸ். பார்த்தசாரதி அய்யங்கார் அவர்கள். |
| 17. | புகழ் மாலை. | தமிழன்பர். |
| 18. | கம்பர் தரும் கண்ணன். | ஸ்ரீமான் பி. சேஷாத்ரி அய்யங்கார் அவர்கள். |
| 19. | முக்கோற்பகவர். | ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸகோபாலய்யங்கார் அவர்கள். |
| 20. | ஸ்ரீ வீரராகவ மாலை. | ஸ்ரீமான் ரா. கிருஷ்ணய்யங்கார் அவர்கள். |
| 21. | திருமாமகள் மாலை. | திருப்புகழ் மணி பிரும்மஸ்ரீ டி. எம். கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள். |
| 22. | திருநரசிங்கர் மாலை. | ஸ்ரீமான் கமலாபுரம் ஆர். ராமஸ்வாமி அய்யங்கார் அவர்கள் திருத்தேவியார் ஸ்ரீ ரங்கநாயகி அம்மாள். |
| 23. | அழகியசிங்கர் மாலை. | ஸ்ரீமான் எம். பி. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்கள். |
| 24. | பொய்கையார் மாலை. | ஸ்ரீமான் மங்கலம் இராமாநுஜய்யங்கார் அவர்கள். |
| 25. | ஸ்ரீ ஆண்டாள் சந்திரகலா மாலை. | சிறந்த தேசிக பக்தர். |

**பெறும் இடம்: 15, கணபதி முதலி தெரு, திருவல்லிக்கேணி.**

